T-UN-316

ஸ்ரீரங்கம்

# ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி தேவஸ்தானம்

## ஸ்தல புராணம்



மஹா ஸம்ப்ரோக்ஷண வெளியீடு

**12—7—1959**

[விலை ரூ. 1-50

# திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) பெரிய கோவில்

---

1. திருமாலின் பூம்பொழில் ஸ்ரீரங்கமாகும். நாற்புறமும் இரு பெரும் காவிரி, கொள்ளிடம் ஆறுகளால் சூழப்பெற்றும், தம்மிடையே பல நீர்க்கால்களையும், வானளாவிய தென்னை, மா, பலா மரச்சோலைகளையும் பொருந்திய இந்நிலப்பரப்பு ஒரு அழகிய சிறு தீவாகும். சென்னையின் தென்மேற்கே விழுப்புரம்–திருச்சிராப்பள்ளி குறுக்கு இருப்புப்பாதை வழியாக தனித்த ரயில்வே நிலையம் கொண்டது இப்பேரூர். சென்னையிலிருந்து 202 மைல் தொலைவிலுள்ளது. இதனைத் தெற்கே 3 மைல் தொலைவிலுள்ள திருச்சிராப்பள்ளியிலிருந்தும், வடக்கே அதன் மாவட்டத்தினின்றும், ரயில் மார்க்கமாகவும், பெருவழியாகவும் அடைய காவிரி, கொள்ளிடம் மீது முறையே கட்டப்பெற்ற இரு பெரும் பாலங்கள் மூலம் அடையலாகும்.

2. இத்தீவின் வட மேற்கில் தென்னரங்கன் திருக்கோவிலும், தென் கிழக்கில் திருவானைக்கா எனும் புராதனச் சிவத்தலமும் அணி செய்கின்றன. இவ்விரு கோயில்களும் பொய்கையார் கண்ட புனித மொழிகளான

“பொன் திகழும் மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இரு அரங்கத் தால்திரிவ ரேனும் ஒருவன்
ஒருவன் அங்கத்து என்றும் உளன்”

எனும் ஒருமைத் திருவாக்குக்கு இலக்காவன.

3. திருவரங்கம் தென்னிந்தியக் கோவில்கள் அனைத்தினும், தனித்த ஒரு அகன்ற நிலப்பரப்பைக் கொண்டதாகும். இன்னும், சைவ உலகத்தில் தில்லைச் சிதம்பரம் “கோவில்” என்ற தனிச் சிறப்பு பெற்றிருப்பது போல

வைணவர்கள் ஸ்ரீரங்கநாதனின் இக்கோவிலேயே "பெரிய கோவில்" எனப் பாராட்டுகின்றனர்.

4. இப்பெரிய கோவிலை நடுவண் கொண்ட இப் பேரூர் 1871-ல் நகராட்சி பெற்று, மருத்துவ சுகாதார வசதிகளையும், போக்கு வரத்து சாதனங்களையும், கல்விச் சாலைகள், இன்னும் மக்களுக்கு வேண்டிய குடி தண்ணீர், மின் ஒளி விளக்குகள் முதலான பல வசதிகளையும் பெற்றுள்ளது. மக்கள் எண்ணிக்கை கடந்த 1951 ஜன சஞ்சிகை பிரகாரம் 26,676 ஆகும்.

5. ஆண்டில் சுமார் 322 நாட்களும் விழாக் கொள்ளும் ஸ்ரீரங்கமும், அதன் சுத்துக்கோவில்களும், வடக்கே நேபாளம், காஷ்மீரம் முதல் தெற்கே இராமேச்சுரம், தனுஷ்கோடை வரை வரும் யாத்ரீகர்களை ஒவ்வொரு நாளும் பெற்றிருக்கும்.

6. பழந்தமிழ் இலக்கியங்களிற் கூறப்பட்டுள்ள புராதன வைணவ விண்ணகரங்கள் ஐந்தினுள் ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கம் சீரும் சிறப்புமுற்றதாகும். செந்தமிழ் கமழும் தென்னுட்டை வாழவைக்கும் தென்னரங்கமும் இதுவேயாம். மற்றவை திருவேகம்பம் (காஞ்சி) திருமால்குன்றம் (அழகர்மலை) திருவேங்கடம் (திருப்பதி) திருவனந்தபுரம் (அனந்த சயனம்) ஆகும். குளிர்ந்த பூஞ்சோலைகளினூடே சிற்ருறுகள் தவழும், இத் திருத்தலத்தின் நடுவண் திருமாலின் ரெங்க விமானம் தங்கி அமைந்த பெருமையால் ஸ்ரீரங்கம் எனும் பெயர் பெற்றது இவ்விண்ணகர்.

7. இங்கு திருக்கோவில் கொண்டருளும் ஸ்ரீரங்கநாதன் முன்னர் பிரமன் தனது திருவாராதன மூர்த்தியாகும். பிரமன் அம் மூர்த்தியை இக்ஷ்வாகு ராஜனது தவத்திற்கிரங்கி அளித்தருள, இக்ஷ்வாகு முதல் அயோத்தியில் ஸ்ரீராமபிரான் வரை சூரிய குலத்தினரால் பூசிக்கப் பெற்றதாகும். தென்னிலங்கையை வென்ற ஸ்ரீராமபிரான்

" நீலமேகம் நெடும்பொன் குன்றத்துப்
பால் விரிந்து அகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர் தொழுது ஏத்த
விரிதிரைக் காவிரி வியன் பெருந்துருத்தித்
திருஅமர் மார்பன் கிடந்த வண்ணமும் "

—சிலப்பதிகாரம்

சீதாபிராட்டியாருடன் அயோத்தியை அடைந்து பட்டாபிஷேகம் செய்துகொண்ட சமயத்தில் தமது அணுக்கத் தொண்டர்களாக யிருந்த அன்பர்களுக்கு நன்றி செலுத்தக் கருதி விபீஷணாழ்வானுக்கு, இக்ஷ்வாகு குலத்தினரது வழிபாட்டிலிருந்த ரங்க விமானத்தைத் தந்தருளியதாகவும்; அவர் இலங்கைக்குத் திரும்புகாலில், காவிரிசூழ் இப்பூம்பொழிலில் சந்திரபுஷ்கரணிக் கரையில் தங்கிப் பூசைகள் முடித்ததும், ஸ்ரீரங்கநாதன் இவ்விடமே இருக்கத் திருவுள்ளங் கொண்டமை தெரிவிக்க, விபீஷணாழ்வானும், அதற்கிசைய, அவர் இங்கு பள்ளிகொண்டார் என்பது வரலாறு. இத்தலத்தை வடநாட்டினரும், தென்னாட்டினரும் பெரியகோவில் என்றும், போக மண்டபம் என்றும், பூலோக வைகுந்தம் எனவும் சிறப்பிக்கின்றனர். இஃதொன்றே ஆழ்வார்கள் பதினொன்மராலும் மங்களாசாசனம் செய்யப்பெற்றதும், இதன் 252 பாசுரங்கள், மற்ற எந்த திருப்பதிகளைவிட அதிகமானதென்றும் தெரிகின்றது.

8. இன்னும் பல சிறப்புக்களும் உள்ளன. வைணவ ஆசாரியர்களுள் சாத்திரங்களை ஆராய்ந்துணர்ந்தும், வைணவத்திற்கு புத்துயிர் அளித்தும், இக்கோவிலின் நடைமுறைகளை வகுத்தும், சமூகத்தினருக்குத் தம்முயிரை அர்ப்பணம் செய்தும், இப்பூத வுடம்பினை இங்கு நீத்து எம்பெருமானின் திருவடிப்பேற்றை அடைந்த உடையவர் (இராமானுஜர்) வாழ்ந்த திருப்பதியும் இதுவாகும்.

---

துருத்தி — ஆற்றின் நடுத்திட்டு. துருத்தி என்னும் சொல்லால் குறிக்கப்படுவது திருவரங்கம்.

விப்பிரநாராயணர் என்ற தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணுழ்வார் இருவரும் திருநாட்டிற்கு எழுந்தருளியதும், பெரிய நம்பிகள், பட்டர் வடக்குத் திருவீதிப் பிள்ளை, பிள்ளை லோகாச்சாரியார் முதலிய ஆசாரிய புருஷர் திரு அவதாரத் தலமும் இதுவாகும்.

9. இன்னும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய அன்னவயல் புதுவை ஆண்டாளும், அணியரங்கனே எனது மணாளன் என மையலுற்றுப் பெருமான் அவரை ஆட்கொண்ட திருத்தலமுமாம். இன்னும் சேரன் குல சேகரன் புதல்வி சேரர்குல வல்லியும், உறையூர் நந்த சோழன் மகள் கமல வல்லியும், டில்லி பாதுஷாவின் மகள் துலுக்க நாச்சியாரும், அழகிய மணவாளனுகிய ஸ்ரீரங்கநாதனுடன் ஐக்கியமாகிய திருத்தலமும் இதுவே. இத்தகைத்த பெருமையாலன்றோ, அடியார் ஒருவர் பெருமாளை வாயார வாழ்த்தி, மனமாரத் துதித்து "நல் நெஞ்சமே", தேனார் பூஞ்சோலைத் தென்னரங்கமா நகரில் அறி துயில் வளர்க்கும் பெருமான் உண்டு, அவனை நினைக்க நீ உண்டு, வாழ்த்த வாயுண்டு, பாடப் பாட்டுண்டு, இனி உனக்குப் பயமும் உண்டோ?

"நாவுண்டு, நீயுண்டு நாமம் தர்த் தோதப்
பாவுண்டு நெஞ்சே, பயமுண்டோ—பூ வுண்டு
வண்டுரங்கும் சோலை மதிலரங்கத்தே உலகை
உண்டுரங்கு வான் ஒருவன் உண்டு".

எனப் பாடினார்.

10. நம் பெருமாள் திருநாமங்கள்: ஸ்ரீரங்கநாதன், பெரிய பெருமாள்.

அவர் இங்கு பள்ளிகொண்டுள்ள விதத்தைத் தொண்டரடிப்பொடியாழ்வார் படம் பிடித்துக் காட்டி ஒரு திருமாலைப் பாசுரத்தில்

"குடதிசை முடியை வைத்துக் குணதிசைபாதம் நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுளெந்தை அரவணைத் துயிலுமாகண்டு
உடல் எனக்கு உருகுமாலோ என் செய்கேன் உலகத்தீரே"

என ஈடுபட்டுள்ளார். இன்னும் சொல்லுமிடத்து அவரது திருக்கோலம்: வேதசிகரம், புஜங்க சயனம், தெற்கே திருமுக மண்டலம், தர்ம வர்மாவுக்குப் பிரத்யக்ஷம், பிரணவாக்ருதி விமானம், வேதச்ருங்கம் (கலசங்கள்), சந்திர, சூர்ய புஷ்கரணிகள், காவிரிக் கொள்ளிட நதிகள், தல விருக்ஷம் புன்னை, தனிக்கோயில் நாச்சியார்—ஸ்ரீரங்க நாச்சியார்—படிதாண்டாப் பத்தினியார், அமர்ந்த திருக்கோலம் இன்னும் பிறவுமாவன. அரங்கமாநகருளான் இக்கோவில் கொண்ட காலம் திரேதாயுகம் எனப் புராணம் கூறுகிறது.

11. ஆகவே தென்னாடு செய்தவத்தால், கங்கையிற் புனிதமாய காவிரி நடுவு பாட்டுப் பொங்குநீர் பரந்து பாயும் பூம்புனல் அரங்கம் தன்னுள், திரு அமர் மார்பனை திருமால் திருக்கோவில் கொண்டமை சரித்திர காலத்திற்கு முந்தியதாகும். ஆனாலும் இப்போது இப்பெரிய கோவிலும் அதன் சப்தப் பிராகாரங்களும், திருச்சந்நிதிகளும் எண்ணற்ற மண்டபங்களும் காலப்போக்கில் எவ்வெப்பொழுது எழுந்தவை என்பது ஆராய்தற் குரியவையாகும். தென்னாட்டுக் கோவில்கள் பலவற்றிலும் இக்கோவிலுக்கு அதிகமான சரித்திரச் சான்றுகளும், கோவிலின் வளர்ச்சி மற்றும் நடவடிக்கைகளைக் குறித்த "கோயிலொழுகு" போன்ற நூல்களும் பல உள்ளன.

12. சரித்திரக் குறிப்புக்குட்படாத கோவில்கள் சுண்ணும்பாலும், செங்கல் (சுடுமண்) லாலும், மரத்தாலும் ஆகியவையாகும். அவை காலப்போக்கில் மறைந்தும், பின்னர் பழுது பார்க்கப்பட்டும், சமீப காலத்தில் கற்றளிகளாக ஆக்கப்பெற்றனவுமாகும்.

முதன் முதல் கற்கோயில்கள் உண்டான காலம் பல்லவ மகேந்திரனது சிற்ப முறை—குடவரைக் கோவிலான கி. பி. 625—674 வரையாகும். கோவிலின் சிற்ப வளர்ச்சியானது பல ஆதாரங்களால் தெள்ளிதிற் காணப்படும். அவை எழுந்த காலத்தை அந்தந்தக் கோவில்களில் காணப்படும், கருப்பக்கிருஹம், அந்தராள மண்டபம், ஸ்தூபி (சிகரம்) கிரீவா, கால்போன்ற அவயவங்கள் பொருந்திய கர்ணகூடு, யாளம், கபோதகம், எராதகம், உத்திரம் போன்ற பிரஸ்தம், போதிகை, பலகை, குடம், கலசம், கால், நாகபந்தம், வேதிகை பொருந்திய ஸ்தம்பங்கள், அக்ரபட்டியல், காந்தம், குமுதம், பத்மம், உபானம் பொருந்திய அதிஸ்டானம், உப பீடங்களின் ஒற்றுமை, வேற்றுமைகளாலும் எளிதிற் காணுவதாகும். இன்னும் பெரும்படியாக கோவிலின் தோற்றம், விமானம், கோபுரம், மண்டபங்கள் திருச்சுற்று மாளிகைகள், பிராகாரங்களின் அமைப்புக்களையும் கண்டும் நிர்ணயிக்கலாகும்.

13. கோவில்களின் காலத்தைப் பொதுவாக நிர்ணயிக்குங்கால், கி. பி. 625—800 வரை, பல்லவர் காலத்துக் குகைக் கோவில்கள், மாமல்ல ரதக்கோவில், ராஜசிம்மனது கற்றளிகள் எனவும், பிற்காலச் சோழர் காலமாகிய கி. பி. 850 முதல் 1100 வரை திருக்கட்டளை சுந்தரேசுவரர் கோவில், நார்த்தாமலை விஜயாலய சோழீச்சுரம், கொடும்பாளூர் மூவர் கோவில், பராந்தகனது ஸ்ரீனிவாசநல்லூர் குரங்கநாதர் கோவில் போன்ற சிறிய கற்கோவில்களென்றும், இன்னும், பிற்காலச் சோழர்களது இராசராசேச்சுரம், கங்கைகொண்ட சோழேச்சுரம், தாராசுரம், திரிபுவனம் போன்ற ஆகாயமளாவிய விமானங்களையும், இன்னும் பிற்கால சோழர்-பாண்டியர் காலத்து, விமானம் சாதாரணமாக அமைந்தும், கோவிலின் நாற்புற மதில்களில் அமைந்த வாயிற் கோபுரங்கள் பெருமிதங்கொண்டு உயர்ந்து எழுந்திருப்பவை என்றும், கி. பி. 1350 முதல் 1600 வரை விஜயநகர

அரசாட்சிகளில், ஸ்ரீரங்கம், மதுரை, வேலூர், விரிஞ்சி புரம், இராமேச்சுரம், சிதம்பரம், திருநெல்வேலி, திருவண்ணுமலை, ஸ்ரீவில்லிபுத்தூர் போன்ற கோவில்களிற் காணும் கண்கவரும் பிராகாரங்கள், பெருமித மண்டபங்கள், அழகிய சிற்பங் ததும்பிய கற்றூண்கள் பிறவும் சிறந்து விளங்குவனவும் காணலாம்.

14. ஆகவே, திருவரங்கம் பெரிய கோவிலின் அமைப்பைக் கருதுங்கால் கோவிலின் முதற்றோற்றம் திரேதாயுகத்தில் தோன்றிடினும், அதன் தற்போதைய அமைப்பு 1300 ஆண்டுகளாக பிற்காலப் பல்லவர்கள், பிற்கால பிராந்தகச் சோழன் முதல், பிற்காலப் பாண்டியர்கள், விஜயநகர அரசர்கள், மதுரை, திருச்சிராப்பள்ளி நாயக்கர் மன்னர்களின் காலங்களில் அவ்வப்போது திருத்தி அமைத்தும், பெருக்கியும் அமைத்தனர் என்னலாம். இதற்குச் சான்றுகள், இக் கோவிலின் உட்பாகங்களிலும், திருமதில்களிலும் சென்ற ஒன்பது நூற்றுண்டுகளாகப் பொறிக்கப்பட்டுள்ள 353 கல் வெட்டுச் சாசனங்களும், இத்துடன் இதன் சரித்திரக் குறிப்புக்களைத் தெரிவிக்கும் பதின்மூன்று செப்பேடுகளுமாகும். *இவையனைத்தும் South Indian Inscriptions வரிசையில் முழு சாசனங்களாகவும், குறிப்புக்களுடனும், இந்திய தொல்பொருள் ஆராய்ச்சியினர் விரைவில் வெளியிட எதிர்பார்க்கப்படுகிறது. (* இதன் சில குறிப்புக்கள் பின் சேர்க்கையில் குறிப்பாக கொடுக்கப் பட்டுள்ளது காண்க)

15. தென்னரங்கமாகிய ஸ்ரீரங்கம் பெரிய கோவில், தென்னுட்டுக் கோவில்கள் யாவற்றையும் விட பெரியதாகும். இதன் நிலப்பரப்பு ½ சதுர மைலுக்கு மேல் ஆகும். கருப்பக் கிருஹ திருவிண்ணுழியில் அமைந்துள்ள ஸ்ரீ ரங்கநாதனை அணுக ஏழு பிராகாரங்களைக்

* Epc. Rep: Ins. 45–46/1891; 51–74/1892; 341–5/1918; 256–69/1930; 1–102/1937; 80–129/1938.

கடந்து செல்லவேண்டும். கோவிலின் வளர்ச்சி, சிற்ப நூல்களை அனுசரித்தும் காலப்போக்கில், அரசர்கள் கோவிலை நடுவண் நடுவிருத்தி, சதுரமான அதன் நாற்புறத்திலும் பல சிறு சந்நிதிகளை அமைப்பதற்கும். கோவில் விழாக்கள் காலங்களில், பக்தர்கள் அரங்கனின் திருவிளையாடல்களை அமர்ந்து காண அகன்ற நீண்ட விழிகள்போன்ற பிராகாரங்களை யும், இன்னும் சரித்திரகாலப் போக்கில், கோவிலின் அரணுகவும், பாதுகாப்புக்காகவும், கோட்டை கொத்தளம் போன்ற பெரும் சுவர்களுடனும், நாற் புறத்திலும், நான்கு திருவாயில்கள் பெருமித கோபுரங்க ளுடனும் அமைந்தும், கோவிலின் ஏழு பிராகாரங்களை யும் ஆடைபோல் வளைத்திருப்பதினிமித்தம் அடைய வளைந்தான் வீதியொன்றும் உள்ளது. இதன் நீளம் 3072 அடி, அகலம் 2521 அடி. இது எட்டாவது பிராகாரம் என்றுலும் பொருந்தும். இதன் பெருங் கற்களாலாகிய 20 அடி 8 அங்குலம் உயரமும், மேல்பாகம் 6 அடி அகலமுமுள்ள பிராகார மதில் இது போது அதிக மாக காணப்பெருது. தெற்கு வாயிலும் பூர்த்திசெய்யப் பெருது, இப்போது காணப்படும் இராய கோபுரம் அளவில் நிற்பதாகின்றது. இந்த அடையவளைந்தான் வீதியின் தென்மேற்கு மூலையில் வெளியாண்டாள் என்கிற சூடிக்கொடுத்த நாச்சியாரது சந்நிதி ஒன்றுள்ளது. ஸ்ரீ ஆண்டாளுடன் பெரியாழ்வார் ஸ்ரீரங்கம் வந்தபோது இந்த இடத்திலிருந்த காவேரியில் நீராட்டம் செய்து கொண்டதாகவும், அதன் ஞாபகார்த்தமாக பெரியாழ்வா ரின் சிஷ்யரான வல்லபதேவன் என்னும் பாண்டிய அரசன் இவ்விடத்தில், ஆண்டாளுக்கும் பெரியாழ்வாருக்கும் இக்கோவிலை அமைத்தான் என்பது இதன் வரலாருகும். இக் கோவிலுக்கு ஸ்ரீ ரெங்கநாதன் ஸந்நிதியிலிருந்து படித்தரம் கொடுக்கப்பட்டுவருகிறது.

16. ஆடிப் பதினெட்டு அன்று, காவிரி கலியாணம் பண்ணிக்கொண்டு ஸ்ரீ ரெங்கநாதன் கோவிலுக்கு எழுந்



இது விஜயநகர அரசரான கிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்டது



ரெங்க விலாஸ் மண்டபம்

தருளும்போதும், பங்குனி உத்ஸவத்தில் உறையூர், சோழகுலவல்லி மணத்தை முடித்துக்கொண்டு ஸ்ரீ ரெங்கநாதன் கோவிலுக்குத் திரும்பும்போதும், வெளியாண்டாளுடன் ஸ்ரீ ரெங்கநாதன் மாலை மாற்றிக் கொள்ளுகிறார்.

17. திருவரங்கம் பெரிய கோவிலை அணுகுபவர்கள் முதன் முதலில் இந்த அடையவளைந்தான் திருவீதியின் திருவாயிலாகிய இராய கோபுரத்தைக் கடந்து மேற் செல்லவேண்டும். இப் பெருவாயில், விஜயநகர ஆட்சியில் எழுந்த ஒரு பெரிய கோபுரத்தின் ஆரம்பமாகும். இது 17-வது நூற்றாண்டில் ஆரம்பித்தபோதிலும் முற்றுப் பெறவில்லை. விஜயநகர ராஜ்யம் திடீரென 1565-ஆம் ஆண்டில் தளிக்கோட்டை (Talikota) சண்டைக்குப் பின்னர் சின்ன பின்னமாக்கப்பட்டதன் காரணமாக இந்தக் கோபுரமும் அதன் வடக்குப் பக்கத்திலுள்ளதும் அவ்வளவிலேயே விடப்பட்டன. இத் தென்புற கோபுரம் முற்றுப்பெற்றிருக்குமாகில் 300 அடிக்கு மேல் வளர்ந்து வானளாவியிருக்கும். இதன் தற்கால நீளம் 130 அடி, அகலம் 100 அடி, உயரம் 43 அடி. இதனைத் தாண்டி திருவீதியை அணுகில் பல கடைகள் பொருந்திய சுற்று வீதியைக் காணுவதாகும். இத் திருவாயிலையும், காணும் சிறிதளவாகிய திருமதில்களையும் அண்ணப்ப உடையார் கட்டியதாகும்.

18. இதனுள் கோவிலின் ஏழாவது மாட மாளிகை சூழ் திருவீதி என்னும் சித்திரை வீதியிலும், ஆறுவது திரு விக்ரமன் திருவீதி என்ற உத்தர வீதியான உள் திரு வீதியிலும், பெரும்பாலும் கடைகளும், பிராகாரங்களில் கோவில் பணியாளர்களும் பரம்பரை ஆதீனஸ்தர்கள் தங்குவதற்கான திரு மாளிகைகளும், இன்னும் தொழி லாளர்கள், வணிகர்கள் இருக்கவும் இடம் அமைத்துக் கொண்டனர். இவ்வாறாக ஏற்பட்ட திருவீதிகள் கோவி லின் பிராகாரங்கள் என்று வழங்கி வருகின்றன. (இதனையொப்பவே இதற்கு அடுத்துள்ள ஜம்புகேசுரம்

என்ற திருவானைக்கா கோவிலுக்குப் பஞ்சப்பிராகாரங்கள் என ஐந்து திருவீதிகள் அமைந்துள்ளதையும் காண லாகும்.)

19. ஸ்ரீரங்கம் சப்த பிராகாரங்களில் தோன்றுவன சிறிதும் பெரியதுமாக 21 கோபுரங்கள். இவை பல நூற்றுண்டுகளில் அவ்வப்போது எழுந்தவை. அவை களின் சிற்ப நுணுக்கங்களைக் கவனிக்குமிடத்து அவை ஒவ் வொன்றினதின் காலவரையுறையும் நன்கு அறியலாம். அப்படியிருந்தும் யாவையும் ஒத்து நோக்குங்கால் அதிக வித்தியாசங்களின்றி அமைந்துள்ளதையும் குறிப்ப தோன்றுகும். இவைகளில் 13 கோபுரங்கள் ஒரே நேராகத் தெற்கு - வடக்கே தோன்றுவன. இக்கோயிலின் வளர்ச்சி சாதாரணமாக இருப்பதுபோல் கிழக்கு மேற் கில் இல்லாமல் தென் வடக்கில் இருப்பதையும், ஸ்ரீரங்கநாதன் தெற்கு நோக்கிப் பள்ளிகொண்டிருத்தலை யும் கவனிக்கவேண்டியதொன்றுகும். தென்னடு தெய்வத் தமிழ் வழங்கும் நன்னடாதலால் திருமாலின் திருமுகம் தெற்கு நோக்கி அமைந்ததுபோலும்.

20. சப்த பிராகாரங்களின் திருமதில்களின் மொத்த நீளம் 32,154 அடி, அல்லது சுமார் 6 மைல்களாகும். மொத்தப் பிராகாரங்களின் உள் சதுர அமைப்பு, 155½ ஏக்கர்களாகும். இப் பெரிய கோயிலின் உட்கூறுகளை ஒரு தனிப்பாடல் விளக்குவதாவது :—

“ மாடமாளிகை சூழ் திருவீதியும், மன்னுசேர்
திரு விக்கிரமன் வீதியும்,
ஆடல் மாறன் அகளங்கன் வீதியும், ஆலிநாடன்
அமர்ந்துறை வீதியும்,
கூடல் வாழ் குலசேகரன் வீதியும் குல விராக
மகேந்திரன் வீதியும்
தேடரிய தர்ம வர்மாவின் வீதியும் தென்னரங்கன்
திருவாரணமே ”

## 7-வது திருவீதி.

21. இனி ஏழாவது, ஆருவது, மற்றும் திருவீதி களின் சில நுணுக்கங்களையும் காண்போம். ஸ்ரீரங்க நாதனது திருக்கோவிலின் ஏழாவது பிராகாரமாகிய ராஜவீதி மாடமாளிகை சூழ் திருவீதி என்றும் சித்திரை வீதி யென்றும் அழைக்கப்படுகிறது. இதன் இருபுறமும் மாளிகைகள் நிறைந்திருப்பதால் "மாட மாளிகை சூழ் திருவீதியென்றும், சித்திரை மாதத்தில் நடக்கும் திருநாள் இந்த வீதியில் நடப்பதால் இதற்குச் சித்திரை வீதி யென்றும் பெயராகும்.

இந்த வீதியின் நான்கு திக்குகளிலும் கோபுரவாயில் கள் உள. திருவீதிமதிலின் நீளம் 2108 அடி, அகலம் 1846 அடி. அவற்றுள் கிழக்கிலுள்ள "தாமோதரன் கோபுரவாசல்" முக்கியமானது. இந்த வாசலுக்குள் தாமோதரனை கண்ணனின் சந்நிதியிருக்கிறபடியால் இப் பெயர் உண்டாகியது. தேள் முதலிய விஷ ஜந்துக்களின் துன்ப நிவர்த்திக்காக மக்கள் வெண்ணெய் கொண்டு போய் இந்த தாமோதரனுக்குச் சாத்துவது வழக்கம்.

22. இவ்வீதியில், பங்குனியில் நடக்கும் ஆதிப் பிரம்மோத்ஸவத்திலும், சித்திரையில், விவசாயிகளான கிராமவாசிகள், அதிகப் பிரயாசையில்லாது, ஸ்ரீரங்கநாதனைச் சேவித்து அருள்பெறும்படியாக விஜய நகர அரசனை விருப்பண உடையாரால் ஏற்படுத்தப் பட்ட சித்திரைத் திருநாளிலும், ஸ்ரீரங்கநாதன் வாகனாதி களிலும், பல்லக்கிலும், (தேர்) ரதத்திலும் வலம் வந்து பக்தர்களை ஆசீர்வதிக்கிருர்.

23. இது தவிர, வைகாசி வஸந்தோத்ஸவக் கடைசி நாள் குதிரை வாகனத்திலும்; உறியடி உத்ஸவத்தில் உபய நாச்சிமார், கண்ணன்களுடனும்; மாசி மாதத்தில் தெப்பம், பந்தக் காட்சிகளிலும், ஸ்ரீரங்கநாதன் இவ் வீதியாய் திருவுலாப் போகிருர்.

## 6-வது திருவீதி

24. இதற்கு அடுத்த வீதி திருவிக்ரமன் திருவீதி என்கிற உள் திருவீதியாகும். திருவிக்ரம சோழனல் ஆக்கப் பெற்றதும், வீதிகளுக்குள் உள் வீதியாகயிருப்ப தாலும், இப்பெயர்கள் இவ்வீதிக்கு பொருந்துவதாகும். இவ்வீதிக்கும், நாற்புறத்தும், கோபுர வாயில்களுள்ளன :- அவற்றுள் மேல்புரம் வாயில் நீங்கலாக மற்ற வாயில்கள் வழியாக ஸ்ரீபெருமாள் திருவுலாக் கொள்ளுகிறார். இவ் வீதியில் தை மாதத்தில் விஜயநகர மன்னன் பூபதி உடையாரால் ஏற்படுத்தப்பட்ட ரதோத்ஸவம் நடக் கிறது. காலை, மாலை வாகனங்களிலும், பல்லக்கிலும் எழுந்தருளுகிறார். ரதத்தில் ஸ்ரீபெருமாள் உபய நாச்சிமாருடன் வீதி வலம் வருகிறார். மாசி மாதம் தெப்ப உத்ஸவத்தில் முதல் ஏழு நாட்கள் எழுந்தருளு கிறார்.

25. இந்த வீதியின் தென் கிழக்கு மூலைக்கு சமீபத் தில் மணவாள மாமுனி என்னும் வைணவ ஆசாரியரின் சந்நிதியுள்ளது. அது ஆதியில் பல்லவராயன் மடமா யிருந்தது. ஸ்ரீரங்கநாதனின் கட்டளைப்படி மணவாள மாமுனி அதில் வசித்து வந்தார். இவரை ஆதி சேஷனின் அவதார மென்று வைணவர்கள் போற்றுகின்றனர். இந்த மடத்தின் கம்பத்தடியில் அவர் யோகத்திலிருக்கும் போது அவ்விடம் சென்ற உத்தம நம்பிக்குத்தனது அவதார ரகசியத்தைக் காண்பித்தபடி, அதே கம்பத்தில் சித்திர ரூபமாய் எழுந்தருளியிருக்கிறார். அவரே மூலத் திருவுருவம். உத்ஸவத் திருமேனியும், மணவாள மாமுனியின் கட்டளைப்படி மிகச்சிறிதாக உள்ளது. இச் சந்நிதிக்கு நித்யப்படி படித்தரங்களும், திரு நக்ஷத்திர, திருவத்யயன உத்ஸவங்களுக்கு மரியாதை வரும்படிகளும், ஸ்ரீரங்கநாதன் திருக்கோவிலிலிருந்து கொடுக்கப்பட்டு வருகின்றன.

## திருக்கோவிலின் தொடக்கம்.

### 5-வது திருவீதி.

26. அகளங்க நாட்டாழ்வார் என்ற மன்னனால் ஆக்கப்பெற்ற ஐந்தாவது பிராகாரமாகிய அகளங்கன் திருவீதியாகும். இதன் வடக்கு, கிழக்கு, தெற்கு பக்கங்களில் வாசல்களும், கோபுரங்களும் இருப்பினும், இத் தென்புறம் வாசல் கோபுரம் நான்கு திக்குகளையும் நோக்கும் நான்கு முகங்களோடு கூடியிருப்பதன் காரணமாக இதற்கு நான்முகன் கோபுர வாசல் என்றும் பெயர். இவ் வாசலுள் நுழைந்ததும் மத்தியில் ஒரு நான்கு கால் மண்டபத்தோடு கூடிய ஒரு விசாலமான திறந்த வெளியும் அதன் முன்புறம் ஒரு பெரிய மண்டபமும் தோன்றும். அதுவே ஸ்ரீரங்க விலாசம் என்றும் ஸ்ரீரங்கநாதர் எழுந்தருளும் மண்டபமாம். திறந்த வெளியிலுள்ள மத்திய மண்டபத்தின் தூண் ஒன்றில் ஒரு சித்தரிக்கப்பட்ட அரசர் உருவம் உள்ளது. இதனைக் கவிச்சக்ரவர்த்தி கம்பரது சிலை என்பர். கம்பர் தாம் பாடிய இராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் நாதமுனிகள் முன்னிலையில் அரங்கேற்றுபடி பண்ணினார். அதை ஞாபகப் படுத்தும் பொருட்டே நாதமுனி சந்நிதியின் முன்னிலையில் கம்பர் சிலையை அமைத்தார் என்பது சிலர் கருத்து. சிலையில் இராஜ சின்னங்களாகிய உடைவாள் இடுப்பிலும், காலில் வீரக்கழலும் அமைந்துள்ளன. இதன் காரணத்தால் இச்சிலை கம்பரது என முடிவு செய்வதற்கு இன்னும் தக்க காரணம் வேண்டுமென்றே சொல்ல வேண்டும். விழாக்களில் ஸ்ரீரங்கநாதன் வாகனாதிகளில் வீதி வலம் வந்த பிறகு இம் மண்டபத்தில் திருவுந்திக் காப்பு (கட தீபாராதனை) நடத்தப் பெறுகிறது.

27. பொதுவாகக் கோவிற்றூண்களில் தெய்வத் திருமேனிகளையும், திருவிளக்குப் பதுமைகளையுமே, செதுக்கி வைப்பது பழமையான வழக்கம் : ஆயினும் பிற் காலச் சோழர் காலத்திலும் விஜய நகர சிற்ப முறை

யிலும் "கோயில் மண்டபம்" சந்நிதியோ எடுப்பித்து வைத்த அரசர், அமைச்சர், தளகர்த்தர் அவரது உறவினர், அவர்களது பத்தினிமார்கள் பெரியார்கள் உருவங்கள். (Portrait Sculptures) "சதாசேவர்" இருகை கூப்பிய உருவங்களாக அமைப்பது வழக்கமாக ஏற்பட்டது. இதன் சான்றுகள் தஞ்சை இராசராசேச்சுரம், ஸ்ரீவில்லிபுத்தூர், அழகர்கோயில், மதுரை திருக்கோயில்களிலும், இங்கு கருட மண்டபம், தாயார் சந்நிதிப் பிராகாரங்களிலும் பார்க்கலாகும்.

28. இந் நாற்கால் மண்டபத்தினின்றும் மேல் நோக்கும்போது ஒரு ஆச்சரியமான சிற்ப முறை கண்களுக்குப் புலப்படும்; மேற்குத் திருமதிலுக்கு மேல் (ஆனையேத்தி மண்டபம் மேல்,) மாடங்கள் போன்ற மகமதிய சிற்ப முறை தோன்றுவன. வைணவ திருவரங்கத்தில், புறச் சமயிகளது சிற்ப முறை எப்படி வந்தது என்பது ஆராயற்பாலது. 14-வது நூற்றாண்டில், ஸ்ரீரங்கம் இரு முறை முகமதியர் கலகங்களில் அல்லல் அடைந்து, முதல் முறை மாலிக்காபூரால் கொள்ளையிடப்பட்டபோது [1310-1313] [See S. K. Ayyangar—South India and her Muhamadan Invaders Pages: 157-160]. ஸ்ரீரங்கநாதனின் திருமேனி துருக்கர்களால் அபகரிக்கப்பட்டு, 62 ஆண்டுகளுக்குப் பின்னர் திரும்பி வந்தது. [கோயிலொழுகு, பக் 12-31]; இரண்டாவது மகம்மதிய [கி. பி. 1327-28] படையெழுச்சி மகமது டின் துக்லாக் காலத்தில் உண்டான போது ஸ்ரீரங்கம் மறுமுறையும் கொள்ளையடிக்கப்பட்டு ஆயிரக்கணக்கான மக்களும் உயிரிழந்தனர். அப்போது ஸ்ரீ ரங்கநாதனின் திருமேனி, பிள்ளை லோகாசார்ய ஜீயரால் பாதுகாப்புக்காகப் பல இடங்களுக்கு எடுத்துப் போகப்பட்டும், அதன் விளைவால் தான் உயிர்நீத்தும்; கடைசியாக கோபண்ணுவால் திருப்பதியினின்றும் இங்கு கொணர்ந்து திருவிண்ணுழியில் பிரதிட்டை செய்யப் பெற்றதாகும். இவ்விரு நிகழ்ச்சிகளைப்பற்றியும் "குரு பரம்பர பிரபாவம்", கோயிலொழுகு, "யதீந்திரப்ரவணப்

பிரபாவம்'' ஆசார்ய—சுக்திமுக்தாவளி என்ற நூல்கள் கூறுவன: இம் முதல் கலகத்தில் ஸ்ரீ ரங்கநாதன் டில்லி பாதுஷாவின் அந்தப்புறத்தில் இருக்கையில் பாதுஷாவின் மகளின் மனதைக் கொள்ளைகொண்டார். திருமேனி, அரையர்களால் டில்லியினின்றும் மீட்கப்பட்டு வந்தது. டில்லி பாதுஷாவின் மகளும் அழகிய மணவாளனைத் தொடர்ந்து வந்து ஸ்ரீரங்கனின் திருச் சந்நிதியில் ஐக்யமானாள். இவளே "சுல்தானி" என்ற துலுக்க நாச்சியார் என்பவள் இரண்டாவது பிராகாரத்தில் பகல் பத்து உற்ஸவ மண்டபத்து வடகீழ் மூலையில் இவளது ரூபத்தை சித்திரமாக எழுதிவைத்து, பிரதிஷ்டிப்பித்து இவளது சந்நிதியும் உள்ளது. இவ் விழாவில் ஸ்ரீ ரங்கநாதன் இவளுக்கு விசேஷ சேவை சாதிக்கிறார். இன்னும், காலையில் அவளுக்காக, டில்லியில் நடந்தபடிக்கு கோதுமை ரொட்டியும், மதுரப் பருப்பும், கிச்சிடியான பொங்கலும், வெண்ணையும், பச்சைப்பாலும் பெருமாள் அமுது செய்தருளுகிறார். கைலி கட்டிக்கொண்டு திருமஞ்சனம் சாதித்துக்கொள்ளுகிறார். இதனையொட்டி, டில்லி பாதுஷா விசேஷ நில தானங்களை ஸ்ரீரங்கருக்கு கொடுத்ததும், கோவிலில் மகம்மதிய சின்னமாகிய இம் மாடங்கள், இயங்கும். இன்னும் இரண்டாவது பிராகார சேனை முதலியார் சந்நிதி மேற்பக்கச் சுவர்களிலும் கோவில் பழுதுபார்க்கும் போது அமைந்தன என்பதும் சரித்திரச் சான்றாகும்.

29. இந்நாற்கால் மண்டப முற்றத்தின் எதிர்நிற்பது ஸ்ரீரங்க விலாச மண்டபம். இது விஜயநகர சிற்ப முறையை ஒட்டியதும் பல வகையிற் சிறந்தது எனவும் கருதப்படுகிறது. திருமலைநாயக்கரது திருப்பணியுமாகும். மண்டபத்தின் தூண்கள் பல அழகிய சிற்பங்களை அமைந்தும், மற்றவை சாதாரணமாகவும் உள்ளன. இவை யாவும் ஒரே கல்லில் செதுக்கப்பட்ட இரட்டைத் தூண்கள் (Twin-pillars) இவை பெரும் பாரத்தைத் தாங்குவதுடன், இவைகளின் கொடுங்கைகள் அழகுடன் மரத்தில் செதுக்கப்பட்டன போல் திறம்பட்டவை. போதிகைகளும்

சிற்ப வளப்பங்கள் பொருந்தியன. முற்காலத்தவை பெரும்படியாகப் பாரத்தை தாங்குவதற்காகவே ஏற் பட்டவை. ஆனல் இவைகளோ முன்புறம் சிற்பங்களாக வனப்புடன் கூட்டியும் பின்புறம் போதிகையாகவும் திகழ்கின்றன.

30. ரங்க விலாச மண்டபத்தின் வடகோடியில் ரங்கநாதனுடைய தீபஸ்தம்பமும் மகாபலிபீடமும் உள்ளன. திருக்கார்த்திகை தினம் இந்த தீபஸ்தம்பத்தின் மீது தீபம் வைக்கப்படாமல், சொக்கப்பனை என்று ஒரு தென்னை மரத்துண்டை நட்டு அதைச் சுற்றிப் பனை ஓலைகளைக்கட்டி, ரங்கநாதனுக்கு ஆரத்தி செய்த பந்தத் தினல் தீயை வைத்து ஒரு பெரும் ஜுவாலையை எழுப்பி கார்த்திகை தீப விழாவை கொண்டாடுகிருர்கள்.

இம்மகாபலி பீடத்துக்கு வடக்கிலுள்ளது ஒரு சிறிய ஹனுமார் கோவில். ஸ்ரீராமரை ஆராதித்த வண்ணமாக கை குவித்து நிற்பதைக் காணலாம்.

31. இன்னும் ரங்க விலாச மண்டபத்தைச்சுற்றி பல ஆழ்வாராதிகளது மற்றும் சந்நிதிகளும், மண்டபங் களும் உள்ளன. ரங்க விலாசத்தின் மேல் பக்கத்தில் நான்முகன் கோட்டை வாசல் மதிலை ஒட்டியது *நாதமுனிகள் சந்நிதியாகும். வைணவாசார்யரான நாதமுனிகளும், அவருடைய பேரனை ஆளவந்தாரும், அவர் சிஷ்யரான திருவரங்கப் பெருமாளரையரும் இங்கு சேவை சாதிக்கின்றனர்.

இதற்கு அடுத்தது யானை ஏறும் மண்டபம். இந்த மண்டபத்தில் ரங்கநாதன் எழுந்தருளி இளநீர் அமுது செய்து அதன்பின் யானை வாகனத்தில் ஆரோகணம் செய்வார். இம்மண்டபத்தின் வடக்கிலுள்ளது சூடிக் கொடுத்த நாச்சியாராகிய ஸ்ரீ ஆண்டாள் சந்நிதியாகும். இச்சந்நிதி, ஆதியில் தோப்பு ராமன் சந்நிதி என்ற பெயருடன் விளங்கியது. அதன் காரணமாக, இன்னும்





வேணுகோபாலன் சன்னதியில் உள்ள சிற்ப வேலைப்பாடுகள்

இச்சந்நிதியில் இராமர், இலக்குமணர், சீதை, ஹனுமார், இவர்களது மூல உற்சவ திருமேனிகளைக் காணலாம்.

32. ஒரு காலத்தில் மகமதிய கலக காரணமாக அடையவளைந்தான் வீதியிலுள்ள நாச்சியார் சந்நிதியிலுள்ள உற்சவ திருமேனிகளான ஆண்டாள், பெரியாழ்வார்கள் இந்த இராமர் சந்நிதிக்குக் கொண்டுவரப்பட்டு அவர்களுக்கு விழா நடத்தப்பட்டதால், இதற்கும் ஆண்டாள் சந்நிதி என்ற பெயர் உண்டாகியது. இதன் பிறகு கோவிலுக்கு வெளியில் ஒரு ஆண்டாள் சந்நிதியும், கோவிலுக்குள் ஒரு ஆண்டாள் சந்நிதியும் ஏற்பட்டுவிட்டபடியால், வெளியிலுள்ளதை வெளி ஆண்டாள் சந்நிதியென்றும், கோவிலுக்குள் இருப்பதை உள் ஆண்டாள் சந்நிதியென்றும் பெயராகியது. ஸ்ரீ ரங்கனுதன் யானை வாகனத்தில் எழுந்தருளி வீதி வலம் வந்திறங்கி சந்நிதிக்குச் செல்லும்போது இந்த உள் ஆண்டாள் முன் நின்று, மாலை மாற்றிக்கொண்டு செல்கிறுர். இச் சிறப்பு, ஏழாம் திருநாளாகிய திருக்கல்யாண உத்ஸவத்தில், யானை ஏற்றம், மாலை மாற்றல்களை, முதல் நாளாகிய ஆரும் உத்ஸவத்தில் நடத்திக்கொள்ளுகிறுர்.

33. உள் ஆண்டாள் சந்நிதியிலிருந்து வெளிவந்ததும் வடக்கே எதிர்ப்படுவது, வேணுகோபாலனது சிறு திருக்கோவில். தனியே அமையப்பெற்ற ஒரு சிற்பக் களஞ்சியம், நாயக்கர் காலத்தது. அவ்வமிசத்தார் தென் இந்திய சிற்பத்திற்கு ஒரு புத்துயிரும், ஒரு புதிய அழகினையும் கொடுத்தவராவர். இக் கோவிலின் வெளிச்சுவர், தஞ்சைப் பெரியகோவில், சுப்பிரமணியர் கோவில் வெளிச் சுவர்ச் சிற்ப அமைப்பை பெரிதுங் கொண்டு, இதன் புரைகளில் கோபிகளது வனப்பைப் பலவகையினும் சித்தரித்தும், இன்னும் பல அரிய சிற்பங்களையும் தாங்கி நிற்கின்றது.

34. இதற்கு வெளியே வடக்கிலிருப்பது வாகன மண்டபம். இதில் ரங்கநாதனுக்கு வாகன சாத்துப்படி

கள் செய்யப்பெறுகிறது. ஸ்ரீ ரங்கநாதன் திருவுலாப் போந்து திரும்பியதும் வாகனத்துடன் உள்ளே பிரவே சிக்க முடியாததால், இம் மண்டபத்தில் இறங்கி சாத்துபடி களையப்பட்டு உள்ளே போகின்றார்.

35. இம் மண்டபத்தின் பின்புறமுள்ளது **அமிருத கலச கருடன் சந்நிதியாகும்.** கருடன் அமிருத கலசத்துட னும் அற்புதச் சிற்பத் திறமை வாய்ந்த வனப்புடனும் ஸேவை சாதிக்கிறார்.

36. இனி, ஸ்ரீரங்க விலாசத்தின் கீழ்புரம் நான்கு முகம் கோபுர வாசல் மதிலை ஒட்டி உள்ள சந்நிதிகளைக் காண்போம். முதலில் உள்ளது, **கூரத்தாழ்வான் சந்நிதி.** இது ஆதியில் ஸ்ரீரங்கஸ்ரீ என்கிற திருவரங்கச் செல்வியின் கோவிலாக இருந்தது. ஒரு காலத்தில் ஜீயர் ஒருவர், இத்தேவியின் திருமேனியை ஊருக்கு வெளியில் ஒரு கோவிலைக்கட்டி அதனில் பிரதிஷ்டிப்பித்தார். இச்சந்நிதி இதுபோது ஸ்ரீரங்கம் ரயில்வே நிலையத்திற்கு எதிரே உள்ளது. இத் திருவரங்கச் செல்விக்கு விழா ஆன பிறகே ஸ்ரீரங்கநாதனுக்கு ஆதி பிரம்மோத்ஸவம் நடத்துவது வழக்கம். இக்கோவிலின் படித்தரம் ஸ்ரீரங்கநாதன் கோவிலிலிருந்து ஏற்பட்டிருக்கிறது. இப்புராதனச் சந்நிதியில், கூரத்தாழ்வார் இடம் பெற்றுள்ளார்.

37. இச்சந்நிதிக்கு வடக்கிலிருப்பது **தொண்டரடிப் பொடியாழ்வார்** சந்நிதியாகும். இவரே "திருமாலை திருப்பள்ளி எழுச்சி" என்கிற பிரபந்தங்களைப் பாடியவர்.

**"கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனையிருள் அகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரித் தொழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொரு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம்மா பள்ளி எழுந்தரு ளாயே."**

**—தொண்டரடிப் பொடியாழ்வார்.**

இச்சந்நிதிக்கு வடக்கே இருப்பது விட்டல் கிருஷ்ணன் சந்நிதியாம்.

38. இச்சந்நிதிக்கு வடக்கிலுள்ளது திருப்பாணுழ்வார் சந்நிதியாகும். உறையூரில் அவதரித்து ஸ்ரீரங்கநாதனை "அமலனுதிப்பிரான்" என்னும் பிரபந்தத்தைப்பாடி, "ஸ்ரீரங்கநாதனைக்கண்ட கண்கள் மற்றென்றினைக் காணுவே" என்று சொல்லி அவர் திருவடியை அடைந்தவர் இவர். இங்கே வீரஹனுமார் மூலவர் இருக்கிருர்.

## 5-ம் திருவீதி

39. ஸ்ரீ ரங்க விலாசத்தைத் தாண்டியதும் ஸ்ரீ ரங்கநாதனின் ஐந்தாம் பிராகாரமாகிய அகளங்க நாட்டாழ்வான் என்னும் மன்னனுல் ஆக்கப்பெற்ற அகளங்கன் திருவீதியை அடைகின்ருேம். இவ் வீதியில் வைகாசி மாதத்தில் வஸந்தோற்ஸவம் நடக்கிறது. திருக்கார்த்திகை முதலான சில விழாக்களிலும் பெருமாள் இவ் வீதியில் திருவுலாப்போதுகின்ருர்.

40. அகளங்கன் வீதியின் தென் மேற்கு மூலையில் சக்கரத்தாழ்வார் சந்நிதியுள்ளது. பெருமாளுடைய சுதர்சன சக்கரத்திற்கு ஏற்பட்ட கோவிலானதால் இது சக்கரத்தாழ்வார் சந்நிதியாம். மூலத்திருமேனி முன்பக்கம் சுதர்ஸனமாயும், பின் பக்கம் நரசிம்மனுகவும் சேவை சாதிக்கிருர். திருவுலாத் திருமேனி எட்டுக் கரங்களுடன் சுதர்ஸனச் சக்கரமாகத் தோன்றுகிருர். பேய், பிசாசு, பில்லி சூன்யம் முதலானவைகளாலும் சிங்க சாரங்களாலும் ஏற்படும் துன்பங்களைப் போக்கி நன்மை யளிப்பதில் இவ் வாழ்வார் கொண்டாடப் பெறுகிருர். சனிக்கிழமைகளில் சேவார்த்திகள் தங்கள் துன்பந் துடைக்குங் காரணமாக நெய், எண்ணெய் விளக்குகள் போட்டு வழிபடுகிருர்கள்.

41. இந்த சக்கரத்தாழ்வார் மிகவும் உக்கிரமாயிருந்தபடியால் ஒரு காலத்தில் இவருக்குமுன்

பார்த்தசாரதியின் திருமேனி பிரதிட்டிக்கப் பெற்றிருக்கிறார்.

42. இச்சந்நிதியின் தென்மேற்கு மூலையில், இராமானுஜர் நூற்றந்தாதி பாடிய திருவரங்கத்தமுதனாரின் திருமேனி காணப்பெறுகிறது. இச் சந்நிதியின் மண்டபங்களைத் தாங்கும் தூண்கள் பலவற்றின் அடிப்பாகத்தில், உட்கார்ந்த சிம்ம உருவங்கள் தோன்றுவதால், இவை காலப்போக்கில் கி. பி. 650-ல் தோன்றிய புராதனக் கோயில் எனக் கூறவேண்டும்.

43. வசந்த மண்டபம், சக்கரத்தாழ்வார் கோவிலை ஒட்டி வடக்கிலுள்ள தோப்பிலுள்ளது. வைகாசியில் இங்கு ஸ்ரீ ரங்கநாதனுக்கு வஸந்த உத்ஸவம் நடைபெறுகிறது. இம்மண்டபத்திற்கு வடபுறம், அகளங்கன் திருவீதியின் வடமேற்கிலிருப்பது ஸ்ரீரங்க நாச்சியார் திருச்சந்நிதியாகும்.

44. இவர் படிதாண்டாப் பத்தினியாய் இக்கோவிலுக்கு வெளியில் போவதில்லை. இவரது திருவிழாக்கள் யாவும், இவரது சந்நிதியாகிய கோவிலிலேயே நடைபெறுகிறது. இப்பிராகாரத்தின், நான்கு புறமும், திருமதில்கள் சூழ, இது ஒரு தனிக் கோயிலாகும். தாயார் சந்நிதிமுன் நாற்கால் மண்டபமும், அதனுள் திருவுண்ணாழிப் பிரதக்ஷணமும், உள்ளன. அதன் வெளியே, அழகிய கொலு மண்டபமும், அதனைச்சுற்றிய பெரியதொரு பிராகாரமும், பிராகாரத்தின் இரு மூலைகளில் பங்குனி உத்திர மண்டபமும், ஊஞ்சல் மண்டபமும் உள்ளன.

45. திருச்சந்நிதியில் இரண்டு மூல நாச்சியார்களும் ஒரு உற்சவரும் இருக்கிறார்கள். முகம்மதியர் படையெடுப்பில் ஸ்ரீ ரெங்கநாதரது முதலிய உற்சவத் திருமேனிகள் வெளியே எடுத்துச் செல்லப்பட, மூல நாச்சியாரை பூமிக்குள் பத்திரப்படுத்திவிட்டனர். கலகம் தீர்ந்த பின்னர் தேடிக் கிடைக்காததனால் வேறொரு திருமேனி

பிரதிட்டிக்கப்பட்டது. ஸ்ரீ ரெங்கநாதர் முதலிய உற்சவத் திருமேனிகள் சந்நிதிகளுக்கு மறுபடியும் வந்தபின்னர் பழய நாச்சியார் தோன்றினர். அவரையும் அர்த்த மண்டபத்தில் பிரதிட்டை செய்தனர். இக் காரணத்தால் இங்கு இரு மூல நாச்சியார்கள் சேவை சாதிக்கின்றனர்.

46. தாயாருக்கு ஆண்டுவிழா நவராத்திரியில் சந்நிதி வாசலிலுள்ள மண்டபத்தில் நடைபெறுகிறது. மற்றவை பிராகாரத்திலுள்ள தென்மேற்கு மூலை மண்டபத்தில் பங்குனி உத்திர தினம், பிரணயகலகோத்ஸவம் (மட்டையடி) ஆன பிறகு ஸ்ரீ ரங்கநாதனும், ஸ்ரீரங்கநாச்சியாரும், ஏக ஆசனத்தில் இனிதமர்ந்து சேவார்த்திகளுக்கு கண்கொளாக் காட்சியளிக்கின்றனர். இது ஒரு விசேஷ தரிசனம். இந்த சேர்த்தியில், சேவார்த்திகள் தங்கள் சக்திக்குத்தக்கபடி திருவிளக்கிடுதல், தளிகை சமர்ப்பித்தல், அர்ச்சனை செய்தலாகிய வழிபாடுகளில் ஈடுபடுகின்றனர். இம்மண்டபத்தில் கல் தூண்களில் ஸ்ரீ ராமர், லெக்ஷ்மணர், சீதை, விபீஷணர், சுக்ரீவன், ஜாம்பவான், ஹனுமார் இவர்களது திரு உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இம் மண்டபத்தின் கீழ் உள்ள பத்தியில், இருக்கும் தூண்களில், நாச்சியாரின் அத்யயன உத்ஸவம், இம்மண்டபத்திலேயே நடத்தும் பொருட்டு ஆழ்வார்களின் திருவுருவங்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றன.

47. பிராகாரத்திலுள்ள, உயர்ந்த மண்டபத் தெற்குத்திருமதிலும், தெற்கு வடக்குச் சுவர் மேற் கட்டியிலும் திருவிண்ணாழிப் பிராகாரச் சுவர்களிலும், 17-ம் நூற்றாண்டில், விஜயரங்க சொக்கநாதர் காலத்து எழுதிய வைணவ புராணம் இன்னும் சரித்திர சம்பந்தமானதுமான பல ஓவியங்கள் காண்பன:—இச்சந்நிதியின் வெளி மண்டபத்தின் மேற்கட்டியில், திருச்சிராப்பள்ளியைத் தலைநகராகக்கொண்ட நாயக்க மன்னரது குடும்பத்தினரதும், அக்கால மக்களது வாழ்க்கையைப் புலப்படுத்தும் விதமாக, அவர்களது உடை, ஆபரணம், தோற்றம், பொலிவு காண்பதான ஓவியங்களும் தீட்டப்

பெற்றுள்ளன. ஒவ்வொரு ஓவியத்தின் கீழும், விளக்கங்கள் தெலுங்கில் வரையப்பெற்றுள்ளன. ஓவியர், இறுதியாக, தான் ஸ்ரீ ரங்கநாதன் திருவருள்கொண்டு தன்னுற் கூடிய வரையில், முழு முயற்சி கொண்டு இவற்றைத் தீட்டியதாகவும் வரைந்துள்ளார். இவை பல இடங்களில், வெயில், மழையின் காரணங்கொண்டு சீர்கேடுற்றுள்ளன. இவைகள் விரைவில், புகைப்படம் பிடித்துப் பாதுகாக்கப்படின், 17-18-ம் நூற்ருண்டின் நாயக்கர் அரசர் காலத்துச் சரித உண்மைகளை உணரலாம்.

48. இக்கோவிலின் வடவண்டைப் பிராகாரத்தில் வில்வ மரம் ஒன்று உள்ளது. இதனடியிலுள்ள மண் உத்ஸவங்களில் மாலிகை தெளிக்க எடுக்கப்படுகிறது. வில்வ மரத்திற்கு கிழக்கிலுள்ள பிருந்தா வனத்தின் கீழ், மகமதிய காலத்தில் மூல நாச்சியார் பூமியில் பத்திரப் பட்டிருந்ததால் அந்த இடத்தை ஒருவரும் மிதிக்காமலிருக் கும் பொருட்டு இந்த பிருந்தாவனம் ஏற்படுத்தியதாக தெரிகிறது.

49. தாயார் சந்நிதிக்குக் கிழக்கில் தோன்றும் உன்னத சந்நிதி மேட்டு அழகிய சிங்கரதாகும். இங்கு நர சிங்கர், ஹிரண்யனை மடியிலிட்டுக் கொண்டு கிழித்து அவன் குடலை மாலை போட்டுக்கொண்ட வண்ணம் எழுந்தருளுகிருர். இச்சந்நிதி முதலில் சோழன் தருமவர்மாவிஞல் பிரதிட்டிக்கப்பெற்றதென்றும், பின்னர் திருமங்கையாழ்வாரால் எடுத்துக்கட்டியும், விமானமும் பின்னர், சேர குமாரன் மலைப்பெருமாளால் பெரிதாக்கப் பட்டதுமாகும், நரசிம்மன்—‘ எடுத்தகை அழகிய சிங்கர்’ எனவும் அழைக்கப் பெறுகிருர். அதன் காரணம்: பெருமாள் நரசிம்மனுய்த் தோன்றி இரணியனைச் சம்ஹரித்த போதிலும், அதே சமயத்தில், அவரது திருக்கரம் ஒன்று மேல் நோக்கி பிரகதாழ் வானுக்கு அபயம் கொடுத்து ரட்சித்ததை உணர்த்து கின்றமையால் என்பர்.

50. சந்நிதியின் எதிரே ஒரு நாற்கால் மண்டபமும், திருக்கோவிலின் வடக்குத் திருவாயில் கோபுரமும் தோன்றும்.

51. கம்பநாட்டாழ்வார் தாம் பாடிய இராமாயணத்தில் ஹிரணியவதைப் படலத்தைச் சேர்த்திருப்பதை, இராமாயணம் அரங்கேற்றுப்படி காலத்தில் ஆக்ஷேபிக்கப் பட்டதென்றும், அதற்குப் பெருமாள் உகந்தால் ஆக்ஷேபனை இல்லையே எனக் கம்பர் சொன்னதாகவும், சபையோர் இதனை ஒப்புக்கொள்ளவும், இச்சந்நிதி முன்னுள்ள நாற்கால் மண்டபத்தில் கம்பர் இதனைப் படித்ததாகவும், அதற்கு நரசிம்மன் தாம் எழுந்தருளியிருந்த கோபுரத்தினின்றும் தாம் உகந்ததாக கர்ஜித்தார் எனவும் கூறுவர். அதற்காக இச் சந்நிதி பெரிதாக்கப்பட்டும், மூன்று காலம் இங்கு ஆராதனை நடந்தும் வருகிறது. கம்ப நாட்டாழ்வார் இங்கு தமது இராமாயணத்தை அரங்கேற்றிய உண்மை இன்றும் அறிதற்பாலது. இம் மண்டபத்திற்கு அடுத்துள்ள அருளாளப்பெருமாள் பெருமண்டபத்தில் பதினேழு நாட்கள் உடையவருக்கும், யக்ஞமூர்த்திக்கும் நடந்த தர்க்கத்தில் மேட்டு அழகிய சிங்கர் தாம் சிரக்கம்பம் செய்து உடையவரை ஏற்று, யக்ஞமூர்த்தியின் தோல்வியையும் வெளிப்படுத்தினரென திவ்வியசூரி சரிதை கூறுகிறது.

52. ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதிக்கு கிழக்கில் கோபுர வாயிலை ஒட்டி வைணவ சமயாசாரியார்களில் ஒருவரான வேதாந்த தேசிகர் சந்நிதி உள்ளது. இதற்கு அடுத்தபடியாக, வைணவ கிரந்தங்களுக்கு வியாக்யானங்கள் செய்வதில் ''வியாக்யான சக்ரவர்த்தி'' என்று பெருமை வாய்ந்த பெரிய வாச்சான் பிள்ளை என்னும் வைணவ சமயாசாரியர் தமது இஷ்ட தேவரான திருவேங்கடமுடையானுடன் தோற்றம் அளிக்கின்றார்.

53. இனி, ஆயிரக்கால் மண்டபம்—மேற்சொன்ன சந்நிதிக்குக் கிழக்கிலிருக்கிறது. மண்டபத்தின் நீளம்

500 அடி. அகலம் 160 அடி. விஜயநகர அரசன் இராமநாத தேவரின் காலத்து, பெருமாள் தேவன், கம்பய தண்டைய நாயக்கர்—சிங்கண தண்டைய நாயக்கர் களால் கட்டியதாகும். இம் மகாமண்டபம் 951 ஒற்றைக் கற்களால் ஆகிய தூண்களையுடையது. இதன் மத்தியி லுள்ள சிறிய மண்டபத்திற்கு திருமாமணி மண்டபம் என்பது பெயர். இந்த மண்டபத்தில் ஸ்ரீ ரங்கநாதன் தமது முக்கிய உத்ஸவமாகிய அத்யயன உற்ஸவம் இராப் பத்து திருநாளில் ஆழ்வார் ஆசார்யர்களுடன் எழுந்தருளி யிருந்து திராவிட வேதமாகிய திருவாய் மொழியை அரையர்கள் மூலம் கேட்டருளி, அதைப்பாடிய நம்மாழ் வார் தன்னில் ஐக்யமானதைக் காட்டியருளுகிறுர். இதில் நடக்கும் விழா, இரவில் பத்து நாள் நடப்பதனுல் அதற்கு இராப்பத்து உத்ஸவம் என்று பெயராகும். ஸ்ரீரங்கநாதன் இவ்வைகுண்ட ஏகாதசி இராப்பத்து விழாவில் பத்து நாள் இரவு இங்கு திருக்கோலங்கள் கொள்ளுவர். அச் சமயம் இம்மண்டபத் தொடக்க முதல் சேஷகிரி ராயர் மண்டபம் வரை வெளியழகியான் என்ற பரந்த மணல் வெளியில் பந்தலிட்டு இங்கு ஸ்ரீரங்கநாதன் பத்தி உலாவ வும், ஆழ்வார் முதலானவர்களுக்கு மரியாதை செய்யவும் செய்வர். இச்சமயங்களில், ஆயிரக்கணக்கான மக்கள் நம்பெருமாளின் திருக்கோலங்களைக்கண்டு களித்து பெருவாழ்வு பெறுவார்கள்.

54. ஆயிரக்கால் மண்டபத்தின் வடக்குக் கோடி யிலுள்ள மண்டபத்தில் சங்கராந்தி தினம் ஸ்ரீரங்கநாதன் எழுந்தருளி, ஆண்டாளால் பாடப்பட்டு, மார்கழி மாதம் முப்பது நாளும், ஸேவிக்கப்பட்டு வந்த திருப்பாவை சாற்று முறை அரையர்களால் முடிவு செய்யப்பெறுகிறது.

55. இன்னும் இம்மண்டபத்தின் தெற்குக்கோடி யிலுள்ள கனு மண்டபத்தில் கனு பண்டிகைக்கு ஸ்ரீ ரங்க நாதன் எழுந்தருளி (பாரிவேட்டை) பரிவேட்டைக் குதிரை ஏறி செல்லுகிறுர்.



வெள்ளைக் கோபுரம்

56. மேற்சொன்ன கொட்டகை போகும் திறந்த வெளிக்குக் கிழக்கேயுள்ளது வெள்ளைக் கோபுரமாகும். வர்ணம் பூசாது வெள்ளைச் சுண்ணச் சாந்தின் நிற மாகவே இருப்பதனல் இது வெள்ளைக் கோபுரமெனப் படுகிறது. ஸ்ரீரங்கம் பெரிய கோயில் பல பிராகாரங் களில் திருவாயில்கள் ஏற்பட்டுள்ள சிறிதும் பெரிதுமான 21 கோபுரங்கள் யாவற்றிலும் உன்னதமான கோபுரம் இதுவேயாகும். ஒன்பது நிலைகள் உள்ளதும், 164 அடி 2 அங்குலம் உயரமுள்ளதுமாகும். கோபுரத்தின் நிலப்பரப்பு 7410 சதுர அடி. திருவாயில் அகலம் 11¾ அடி, உயரம் 24¾ அடி. இதன் அளவையும், ஆகிய கல் சாந்துகளையும் கருதி இதன் நிறை ஒருவாறு 24,880 டன் ஆகும் என்று கணக்கெடுக்கப்பட்டுள்ளது.

57. இக்கோபுர வாசலை ஒட்டி தென்புறமிருப்பது சேஷகிரி ராயர் அணிதிகழ் மண்டபமாகும். அதன் முன் னணியில் எட்டுத் தூண்களில் புலிகளுடன் போராடும் வீரர்களைத் தாங்கியும், சீற்றங்கொண்டு எழுந்து தாவு கின்ற குதிரைகள் எழுந்து நிற்கும் தோற்றமுங்கொண்ட சிற்பத்தின் சிகரங்களைக் காணலாகும். இவை இச்சிற்பம் எழுந்த விஜயநகர ஆட்சியின் வீறுபெறு சிறப்பைச் சித்தரிக்கும் சின்னங்களாகக் கருதப்படுகிறது. ஸ்ரீரங்கம் கோயிலில் காணப்படும் எல்லாச் சிற்ப உருவங்களைவிட மிகவும் வேலைத் திறனும், வனப்பும், பெருமையும் பொருந்தியவை இவைகளேயாகும், இவ்வுயரிய சிற்பங் கள் கருங்கற்களால் செதுக்கப்பட்டிருப்பினும், காண் பதற்கு இரும்பை வார்த்து ஆக்கிய வார்ப்புத்திறனையும் வளவளப்பையும் கொண்டமை பாராட்டற்பாலது. இதன் தென் கிழக்கில் ராமர் ஸன்னதி ஒன்று இருக்கிறது.

58. இம் மண்டபத்திற்குத் தெற்கில் காண்பது, அநேக வைணவ ரகஸ்ய நூல்களை இயற்றிய பிள்ளைலோகாசாரியர் சந்நிதியாகும். இதற்கு தெற்கில் காண்பது அருச்சுனனுக்கு கீதை உபதேசம் செய்த பாவனையுடன் தோன்றும் பார்த்தசாரதியின் சந்நிதியாம்.

59. இதன் தெற்கில் தோன்றுவது விசிஷ்டாத்வைத சித்தாந்த தாபகரான இராமானுஜர் எனப்படும் உடையவர் சந்நிதியாகும். இந்த இடம் ஆதியில் ஸ்ரீரங்க நாதனின் வஸந்த மண்டபமாக இருந்தது. உடையவர் கால கதியானவுடன் அவருடைய பூத உடம்பைத் தமது வஸந்த மண்டபத்திலேயே திருப்பள்ளிபடுத்தும்படி (சமாதி) ஸ்ரீ ரங்கநாதன் கட்டளையிட்டபடியே செய்தார்கள். அது அவரது சந்நிதியாக விளங்குகின்றது. இதன் மேல்புறமும் உள்ளும், சமீபகாலத்தில், மரக்கொப்பாகக் கட்டியது ஆழ்வார் ஜீயராவார். இதில் உற்சவர் ஸ்ரீரங்க நாதனைச் சேவித்தவண்ணம் அஞ்சலி செய்கிறார். மூலவர் ஞானோபதேசம் செய்யும் பாவனையாகத் தோற்றம் அளிக்கிறார். பிரதி தினமும் இச்சந்நிதியில் திராவிட வேதபாராயணம் நடக்கிறது. உடையவருக்கு திவ்விய தேசங்களில் ஏற்பட்டுள்ள சந்நிதிகளுக்குள் இதில் அவரது திருமேனியே இருப்பதால் இது வைணவரால் மிகவும் போற்றப்பெறுகிறது. இச்சந்நிதியின் மண்டபத்தில் உடையவருடைய சரித்திரம் சித்திரத்தால் தீட்டப் பெற்றுள்ளது. திருவரங்கத்து அமுதனார் உடையவரைப் பாராட்டிய இராமானுஜ நூற்றந்தாதி என்னும் பிரபந்தத்தை ஸ்ரீரங்கநாதன் தமது பிரம்மோத்ஸவம் பத்தாம் திருநாளில் வீதிவலம் வரும்போது கேட்டுக் கொண்டு இந்த ஸந்நிதிக்கு வந்து உடையவரால் செய்யப் படும் ஆதிக்கியத்தைப் பெற்று உடையவருக்கு அருள் செய்கிறார்.

60. உடையவர் சந்நிதி முன் மண்டபத்திற்கு மேற்கில் திருமதிலையொட்டி ஆதியில் அஸ்வசாலையாயும் கோ சாலையாயும் இருந்த கட்டடம், இப்போது 1935 முதல் நூல் நிலையமாகவும், பொருட்காட்சிசாலையாகவும் மாற்றப்பட்டிருப்பது பாராட்டற்குறியதாகும். இதில் வளம் மிகுந்த, சாத்திரங்கள், மற்றும் கண்கவரும் உலோகத்தாற் செய்யப்பட்ட உருவத்திருமேனிகள், தந்தத்தால் செய்யப்பட்ட பிரதிமைகள், முற்கால யுத்த

தளவாடங்கள், பல அரிய செப்பேட்டுப் பட்டயங்கள், இன்னும் பிறவுமான புராதனப் பொருள்கள் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. இதற்கடுத்த கட்டடங்கள், இத் திருக்கோயில் நிருவாகஸ்தரது அலுவல் அகமாகும்.

### 4-வது திருவீதி.

*61.* இதுவரை திருக்கோயிலின் ஐந்தாம் பிராகார மாகிய அகளங்கன் திருவீதியாக வலம்வர அங்குள்ள சந்நிதிகள், மண்டபங்கள், கோபுரம், மற்றும் நூலகம், அலுவல் நிலையம் யாவும் கண்டு வர, நம் முன் அடுத்த படியாக எதிர் நிற்பது, ஸ்ரீரங்கநாதனின் நான்காவது பிராகாரத்தினுட்புகும் திருவாயிலாகும். கங்கையும், யமுனையும் இவ்வாயிலுக்கு காப்புச் செய்கின்றனர், வாயிலைக்கடக்க, ஆலிநாடன் என்னும் திருமங்கையாழ்வா ரால் உண்டாய ஆதிநாடன் திருவீதியினுட் புகுவோம். உட்புகுந்ததும் எதிரே காண்பது கருடாழ்வார் சந்நிதியின் பின்புறம். முன்புறத்தின் எதிரே நிற்கும் பெரிய திருவடி யாகிய ஆழ்வார், பெருமாளை நோக்கி சேவை செய்யும் இந்த திருக்கோலம், இதனையொத்த அழகியதும், பெரியதுமான கருடாழ்வார் சந்நிதி எங்கும் இல்லை யெனலாம். இவருக்கு முன் இருந்த பஞ்சலோகத் திருமேனி துருக்கர் படையெடுப்பில் அழிந்ததாகத் தெரிகிறது. இம் மண்டபத்தைக் கட்டிய தச்சன் பரமன் என்பான். ஆதலின் இதனை பரமன் மண்டபம் என்றும் கூறுவர். இதன் வாயில் இருமருங்கும், சுக்ரீவன், அங்கதன் காப்புச் செய்கின்றனர். இச் சந்நிதி சடையவர்மன் (Ins. of Sundara Pandya) முதற் சுந்தரபாண்டியன் காலத் தில் (கி.பி. 1251-74) ஏற்பட்டிருக்கலாம். இந்த இடத்தில் ஆதியில் பக்ஷிராஜன் தோப்பு என்று ஒரு தோப்பும் அதன் மத்தியில் கருடன் சந்நிதியுமிருந்தன. அந்தத் தோப்பு திருமலை நாயக்கர் காலத்தில் அழிக்கப்பட்டு இம் மண்டபம் கருடன் சந்நிதியைச் சுற்றி நிர்மாணிக்கப் பட்டது. இச் சந்நிதி முன்னுள்ள இரண்டு கற்றூண்களில்

திருமலைநாயக்கருடையவும், அவரது சிற்றரசர்களுடையவும் உருவச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இம் மண்டபம், தேவராஜன் குறடு எனவும் அழைக்கப்படுகிறது, இந் நாற்கால் மண்டபத்தில், பகல் பத்து பத்தாம் திருநாள் இரவு ஸ்ரீ ரங்கநாதன் மோஹினி அவதாரத்துடன் வந்து பக்தர்களுக்கு சேவை சாதிக்கிறார்.

62. இப்பெரிய மண்டபத்தின் கீழ்பாகத்தில் சூரிய புஷ்கரணியும், அதற்கடுத்து தங்கம் வெள்ளியாலாகிய வாகனங்கள் வைத்துள்ள கருவூலங்களும் திகழ்வன.

63. கருட மண்டபத்திற்கு மேல்புறமிருப்பது, "வேதம் தமிழ் செய்த மாறன்" என்று சடகோபன் கொண்டாடப்பெறுபவரும், ஸ்ரீ ரங்கநாதனால் நம்மாழ்வாரென்று அழைக்கப்பெற்றவருமான ஆழ்வார் மதுர கவி திருமங்கை ஆழ்வாருடன் எழுந்தருளியுள்ள நம்மாழ்வார் சந்நிதியாகும். இக் கருட மண்டபத்தின் தென் கிழக்கு மூலையில், வைணவ, ஆசார்யருள் ஒருவரான திருக்கச்சி நம்பி சந்நிதி இடம் பெற்றுள்ளது. இனி ஆலிநாடன் திருவீதியை வலமாக வரும் வழியில் கோயிலின் மேற்கே கொட்டாரமும் கிழக்கே ஸ்ரீ பண்டாரமும், அமைந்திருக்கின்றன. ஸ்ரீ ரங்கநாதனின் கொட்டாரத்தில், நெல் சேமித்து வைப்பதற்கான ஐந்து பழமையான பெரிய குதிர்களைக் காணலாகும். இக் கோயில் சந்நிதி செலவுகளுக்குத் தேவையான கடுகு, மிளகு, நெய் முதலான எல்லா சாமான்களும் இங்கு சேமிக்கப்பட்டுள்ளன. இப் பழமையான கட்டிடங்கள் திருமங்கையாழ்வாரால் ஆக்கியது. இதில் கூரநாராயண ஜீயர் பிரதிஷ்டை செங்கமலவல்லி நாச்சியார், (மூலவர்) தான்யலக்ஷ்மியாகவும், சித்ர ரூபமாக ராம பட்டாபிஷேகமும் இருக்கின்றன. நித்தியப்படி திருவாராதனம் ஜேஷ்டாபிஷேகமுண்டு.

64. இக்கொட்டாரத்தின் வடக்கில் உள்ளது மேல் பட்டாபிராமன் சந்நிதி. இந்த ஆலிநாடன் திருவீதியின் கீழ்புறம் ஒரு இராமன் சந்நிதி ஏற்பட்டதனிமித்தம்,

இந்தச் சந்நிதி மேல் பட்டாபிராமன் என அழைக்கப் பெறுகிறது. இக் கோவிலுக்கு வடக்கிலுள்ளது முதலாழ்வார் சந்நிதி. இதில் ஆழ்வார்களுக்குள் முதலில் தோன்றியவர்களாகிய பொய்கை, பூதம், பேயார் என்னும் ஆழ்வார்கள் இங்கு கோயில் கொண்டுள்ளனர்.

65. இம் முதலாழ்வார் சந்நிதிக்கு வடக்கிலிருப்பது தீர்த்தக்கரை வாசுதேவப்பெருமாள் கோவிலாகும். இவர் சந்நிதியின் எதிரில் உள்ளதான சந்திரபுஷ்கரணியின் அதிதேவராவர். இதனை அடுத்து, தன்வந்தரிகோயில் உள்ளது. உடையவர் காலத்து நாவல் பழ நிவேதனத்தை உண்டதனால், சேவார்த்திகள் தோஷமுற, ஸ்ரீ ரங்கநாதன்கட்டளைப்படி கருட வாகன பண்டிதர் தேவ வைத்தியரான தன்வந்திரியைப் பிரதிட்டிப்பித்து ஒருகஷாயம் தயாரித்து பெருமாளுக்கு நிவேதித்து சேவார்த்திகள் உண்டு தெளிவடைந்ததினிமித்தம் இவ்வாரோக்கியசாலை உண்டாகியதாகும். மேற்குறித்த கோவிலை ஒட்டிய கோபுர வாசலில், தெற்கு, கிழக்கு, மேற்கு மூன்று பக்கங்களிலுமாய் செல்லும் மூன்று வாசல்களிலிருப்பதாலும், அங்கு ஐந்து குழிகளுள்ள ஏதோ ஒரு கல் போட்டிருப்பதாலும், அதையும் சேர்த்து, அக் கோபுர வாயிலை ஐந்து குழி மூன்று வாசல் என்பர். சந்திர புஷ்கரணி யானது ஸ்ரீ ரங்கநாதனின் ஒன்பது தீர்த்தங்களுள் மிகவும் முக்கியமானது. சந்திரன் தனக்கு ஏற்பட்ட சாபத்தைத் தீர்த்துக் கொள்ள இதில் தீர்த்தமாடி இதனருகிலுள்ள புன்னை மரத்தடியிலிருந்து தபசு பண்ணித் தனது சாபம் தீரப் பெற்றான் என்பது இதன் ஐதீகமாகும். ஸ்ரீரங்க விமானத்தின் பேரில் விழும் மழைநீர் யாவும், இப் புஷ்கரணியிலேயே வந்துசேர்வதால், இதன் மேன்மை அதிகமானதென எண்ணப்படுகிறது, பங்குனி உத்ஸவம் நீங்கலாக மற்ற எல்லா உத்ஸவங்களிலும் ஸ்ரீ ரங்கநாதன் சந்திர புஷ்கரணியில் தீர்த்தம் சாதிக்கிறார். பங்குனி உத்ஸவத்தில் மட்டும் கொள்ளிடத்தில் தீர்த்தம்

சாதிக்கிறார். இதன் வடக்கு பிராகாரத்தில் வராக பெருமாள் ஸந்நிதி உளது. வியாஸர் ஸந்நிதியும் இருந்து இப்பொழுது பரமபதநாதன் ஸந்நிதி தென் பக்கத்தில் ஏளியிருக்கிறார். தென்கிழக்கில் இருந்த வரதராஜப்பெருமாளும் இப்பொழுது வராகப் பெருமாளுடன் ஏளியிருக்கிறார்.

66. சந்திர புஷ்கரணியின் கீழண்டை கரையில் சோழேந்திரசிம்ஹன் கட்டிய கோதண்டராமர் சந்நிதி உளது. ஆதியில் இக் கோயில் திருவானைக்காவலில் இருந்தது. அதனுள் இருந்த திருமேனிகளும், ஸ்ரீரங்கம் சப்த பிராகாரங்களுக்கு வெளியிலிருந்த நான்கு இராமர் கோவில்களும் பழுதுபட, அவற்றில் இருந்த திருமேனி களும், இங்கு பிரதிட்டிக்கப்பெற்றுள்ளன. இச் சந்நிதி யில் பெருமாள் திருமொழி பாடியவரும், இத்திருக் கோயில் மூன்றும் பிராகாரம் கட்டினவருமான குல சேகராழ்வாரும் சேவை சாதிக்கிறார்.

67. இதை அடுத்து கிழக்கே, பரமபதநாதன் சந்நிதி உளது. இதில் வைகுண்ட நாராயணன் தன் பக்தர்களான ஆழ்வாராதிகளுடனும், ஆதிசேஷன்பேரில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்கிற மூன்று நாச்சிமார்களுடன் அமர்ந்துள்ளார். ஆயிரக்கால் மண்டபம் ஏற்படுமுன்னர் இச் சந்நிதி வாசலில் தான் இராப்பத்து உத்ஸவம் நடந்ததாகத் தெரிகிறது. இது ஒரு புராதன சந்நிதியாகும். இவ் வாலி நாடன் திருவீதி கிழக்குப் பிராகாரத்தில் எதிர்ப் படுவது கோடை மண்டபம் என்ற பூச்சாத்தும் மண்டபம். சித்திரை மாத சுக்கில பக்ஷத்தில் பெருமாள் இந்த மண்டபத்தில் புஷ்பம் சாத்திக்கொண்டு சைத்யோப சாரங்கள் செய்யப்பெற்று, பத்தி உலாப் போந்து, சந்நிதிக்குத் திரும்புகிறார். உற்ஸவத்திற்குப் பின் ஐந்து நாள் வரை மண்டபத்தில் தங்கி திருவாராதனை முதலானவை கண்டருளி, வீணை வாத்தியங்களுடன் சந்நிதிக்கு எழுந்தருளுகிறார்.

68. இதனை அடுத்து, தென்கிழக்கு மூலையிலுள்ளது ஸ்ரீ பண்டார மண்டபம். இதில் பெருமாளுக்கு ஸ்ரீஜெயந்தி உத்ஸவம் நடைபெறுகிறது. இதற்கு வடக்கில் காண்பது திருமழிசையாழ்வாரது சந்நிதியாகும்.

### 3-வது குலசேகரன் திருவீதி.

69. இனித் தென்படுவது மூன்ருவது பிராகார வாயிலாகிய ஆரியபடாள் திருவாசல். ஆதியில் வடக்கே யிருந்து வந்த ஆரியப் பிராமணர்களால் காவல் புரியப் பட்டதால் இவ்வாயிலுக்கு இப்பெயர் உண்டாயிற்று. வாயில் இருமருங்கும், சக்கரத்தாழ்வாரும் கருடனும் காப்புச் செய்கின்றனர். உள் நுழைந்ததும் குலசேகராழ் வாரால் உண்டாக்கப்பெற்ற குலசேகரன் திருவீதியை அடைகிருேம். எதிரில் காண்பது அணியரங்கன் திருமுத்தம். முன்னம் பரந்த வெளியாக துவஜஸ்தம் பமும் பலிபீடமும் இதன் கிழக்கே சுந்தரபாண்டியனது துலா புருஷ மண்டபமும் இருந்தன. இப்பொழுது இந்த இடம் முழுதும் மண்டபமாக மேலே மூடப் பட்டுள்ளது.

70. ஆரியபடாள் வாசலுக்கு மேல்புரமுள்ளது, குலசேகராழ்வாரால் கட்டப்பட்ட திருப் பவித்திர மண்டபம்: இங்கு ஸ்ரீ பெருமாளுக்கு ஆவணியில் திருப் பவித்திர உத்ஸவம் நடக்கிறது. இம் மண்டபத்தில் மேற்குப் பகுதியில் ஹயக்கிரிவர் சரஸ்வதி சந்நிதிகளுள் ளன. துவஜாரோகண மண்டபம், ஆரியபடாள் வாசலுக் குக் கிழக்கில் உள்ளது. இம் மண்டபத்திலுள்ள தேரில் ஸ்ரீ பெருமாள் எழுந்தருளி, பிரம்மோத்ஸவத்தில் எதிரி லுள்ள துவஜஸ்தம்பத்தில் துவஜாரோகணம் செய்யக் கட்டளையிடுகிருர். இம் மண்டபத்தின் கிழக்கில் நெய் சேகரித்து வைக்கும் நெய் கிணறுகள் இருக்கின்றன. இங்கே அன்ன மூர்த்தி எள்ளியிருக்கிருர்.

71. துவஜாரோகண மண்டபத்தின் வடமேற்கு மூலையிலுள்ள ஒரு தூணின்மேல் ஸ்ரீரங்கநாதனைச்சேவித்த

வண்ணம் ஹனுமார் சேவை சாதிக்கிருர். மிக்க வரப் பிரசாதி. பிரார்த்தனைகளும், திருமஞ்சனமும் அடிக்கடி நடந்துகொண்டிருக்கும். தேவஸ்தானத் திட்டத்தில் இவருக்கு தினமும் திருமஞ்சனம் நடைபெறுகிறது.

72. இம்மண்டபத்திற்கு மேற்கிலுள்ளது விஜயநகர ராம ராயரின் தமயன் கந்தாடை ராமானுஜனது ஊஞ்சல் மண்டபமாகும். இதில் ஸ்ரீ பெருமாளுக்கு, துலா மாதம் கிருஷ்ணபக்ஷம் ஏகாதசியோடு முடிவாகிற ஊஞ்சல் உத்ஸவம் நடைபெறுகிறது. இம்மண்டபங்களைச் சூழப் பெற்ற அணியரங்கன் திருமுத்தத்தின் நடுநாயகமாக நிற்பது பொன் தகடால் வேயப்பட்ட அழகிய துவஜ ஸ்தம்பமும், அதற்கடுத்த பலி பீடமுமாகும். இதில் தை, பங்குனி, சித்திரை மாதங்களில் நடக்கும் பிரம்மோத் ஸவங்களில், கருட படமாகிய துவஜம் (கொடி) ஏற்றப்படுகிறது. பலிபீடத்தில் பெரிய பெருமாள் தொடங்கிக் கோவிலிலுள்ள சகல தேவதைகளும் ஆவாஹனம்செய்யப் பட்டுள்ளார்கள். அதன் பொருட்டு இப்பலிபீடத்திற்கும் திருமஞ்சனம் செய்கிருர்கள். மழையில்லாமற் போனலும், வேறு துன்பங்கள் நேர்ந்தாலும் அவற்றைப் போக்குதற் பொருட்டு, இப் பலிபீடத்திற்கு 10 நாள் 20 நாள் கணக்கில், காவேரியிலிருந்து மேளவாத்திய பாராயணங்களுடன் திருமஞ்சன நீர் கொண்டுவந்து திருமஞ்சனம் செய்தும், தளிகையும் ஆராதிப்பது உண்டு. இத் துவஜஸ்தம்பம் பலி பீடத்தினருகே கிராமாந்திர சேவார்த்திகள் தங்கள் தங்கள் விளை நிலங்களில் விளைந்த பொருள்களையும், காணிக்கைகளையும் ஸ்ரீ ரங்கநாதனுக்குச் செலுத்துவார்கள்.

73. இக் குலசேகரன் திருவீதியின் மேல்பாகத்துக்கு திருநடை மாளிகையென்றும், துரை பிரதக்ஷணம் என்றும் பெயர். இதன் வடவண்டை மூலையில் விஜயரெங்க சொக்கநாத நாயக்கரால் கட்டப்பட்ட உள் கோடை மண்டபம் இருக்கிறது. இதில் கோடை உத்ஸவத்தில் ஸ்ரீரங்கநாதன் எழுந்தருளியிருக்கிருர் : நாயக்கர் காலத்தில்



வேணுகோபாலன் கோவில்



சேஷராயர் மண்டபம்



வேணுகோபாலன் கோவில்

தில் மரியாதையாக நாயக்க மன்னனை துரை என்று அழைத்தமையால் அவர் கட்டின மண்டபமும் பிரதக்ஷண மும், அப்பெயரால் வழங்குகிறது.

74. இனி பிராகாரத்தின் வடவண்டை வாசலாக இருப்பதுவே, பரமபத வாசல் ஆகும். இந்த வாசலுக்குப் பக்கத்தில் எழுந்தருளி, ஸ்ரீ ரங்கநாதன் வேத விண்ணப்பங் களெல்லாம்கேட்டபிறகு, ஸ்ரீ வைகுந்தத்தை அடைவார்கள் விரஜாநதியில் மூழ்கிப் பரமபதவாசலை அடைகிறார் கள் என்ற பாவனையை காட்டுகிறபடியால், இவ் வாசல் பரமபத வாசலெனப்படுகிறது. இதன் கீழ்ப்புறமுள்ள கிணறும் விரஜா நதி என்று வழங்கப்படுகிறது.

75. இனித் திருவீதி வலம் வருகையில் காண்பது அரவிந்த நாயகியாரது, சிறியதும் பெரியதுமான மடைப் பள்ளிகளாகும். இங்கு ஸ்ரீ ரங்கநாதனுக்கு ஏற்பட்டுள்ள நித்திய நிவேதனங்கள் பணியாரம் முதலிய நெய்ப் பண்டங்கள் செய்யப்பெறுகின்றன. இப் பிரசாத மடைப் பள்ளியில் இரு வேளைகளிலும் நடக்கவேண்டிய ஹோமம் நடைபெறுகின்றன. திருக் கார்த்திகை தினம் ஏற்ற வேண்டிய திருவிளக்குகள், இந்த ஹோம குண்டத்தி லிருந்து ஏற்றி, பிரதிட்டை செய்து, பின் பெருமாள் சந்நிதிக்கு கொண்டுபோய்ச் சேர்க்கப்படுகிறது.

### 2-வது பிராகாரம்.

76. இனி அடைய இருப்பது ஸ்ரீ ரங்கநாதனின் இரண்டாம் பிராகாரமாகிய ராஜமகேந்திரசோழனது திருவீதியாகும். இந்த வாசலுக்குப் பெருமாள் எழுந் தருளினவுடன் நாழிகை என்னவாயிற்றென்று பெருமா ளுக்கு ராஜோபசாரமாகச் சொல்வது ஆதிகாலத்து வழக்கம். அக்காரணத்தினால் முற்காலத்தில், காலங் காட்டும் நாழிகைவட்டில் பொருந்திய, வாயில் எனவும் பொருந்தும், இவ்வாயிலின் பெயர் நாழிகை கேட்டான் வாசல் ஆயிற்று. இவ் வாயிலின் முன் புறம், பத்ரன்,

சுபத்திரன், என்கிற தேவதைகளும், பின் புறம், சங்க நிதி, பதுமநிதி இருவர்களும் காப்புச் செய்கின்றனர். இப் பிராகாரத்தில், பஞ்ச பருவ உத்ஸவங்களும், மார்கழி, இராப்பத்து முதல் ஒன்பது நாட்களிலும், சித்திரைக் கோடைத் திருவிழா, 6 முதல் 9 வரை, நான்கு நாட்களில் ஸ்ரீ ரங்கநாதன், ஏகாந்தமான சேவை சாதித்து, வீணை கேட்டுக்கொண்டு உள்ளே எழுந்தருளுகிறார். பிராகாரத்தின் உள்ளே பெரிதும் திருநடை மாளிகைகள், நாழிகை கேட்டான் வாசலுக்கு உட்புறம் தென் மேற்கே இருப்பது கோயிற்கருவூலமாகும். இதில் பெருமாளுடைய திருவாபரணங்கள், தங்கம் வெள்ளிகளாலாகிய பஞ்ச பாத்திரங்கள் மற்றும் விலையுயர்ந்த வஸ்துக்கள் யாவும் இங்கு சேமிக்கப் பட்டுள்ளன. இதற்கு வடக்கில் பெருமாளுக்கு சந்தனம் அரைக்கவும், திருமஞ்சனத்திற்கு வெந்நீர் போடவும் ஆடைகளை உலர்த்தவும் தனித்தனி அறைகளிருக்கின்றன. இவற்றின் வடக்கேயிருப்பது சுக்கிரவார அறை. இந்த அறையில் பெருமாளுக்கு வெள்ளிக்கிழமைகளில் சாத்தவேண்டிய புனுகெண்ணை தயாராகியிருப்பதோடு, கஸ்தூரி திருமண்காப்பு சேர்ப்பதும், சந்தனத்துக்கு வாசனைத் திரவியங்கள் சேர்ப்பது முதலியன நடைபெறுகின்றன.

77. இன்னும் சிறிது செல்ல, படியேத்தம் சேவை சாதிக்கும் இராஜ மகேந்திரன் திருவாசலும், அதற்கடுத்து 17-ம் நூற்றுண்டில் இங்கு சோழ இராஜ்ஜிய பாரந் தாங்கிய விஜயரங்க சொக்கநாத நாயக்கர், அவர் பத்தினி திருமலையம்மாளும், அன்னாரது இளவரசு பங்காரு திருமலை, அவர் பத்தினியுமாக நால்வரது தந்தத் திரு உருவங்கள் நிற்பதைக் காணலாகும். இவர்கள், கைசிக ஏகாதசியன்று ஸ்ரீரங்கநாதன் படியேத்த சேவையை ராசமகேந்திரன் திருவாயிலிலே காண வந்தவர்கள். சற்றே காலம் தாமதித்து வந்தமையின் சேவை முடிந்தது. "இனியும் செய்யலாமோ" என்றனர் அரசர். கோவில் நிருவாகிகள், "மறு வருஷந்தான்" என்று அர்த்தங்

கொள்ள, "வொச்சேடிகி" என்று சொல்லிப்போந்தனர். ஆதலின் இங்கு ஸ்ரீரெங்கநாதனின் சேவைகளும் எக்காரியங்களும் அந்தந்த வருஷத்தில், அந்தந்த சந்தர்ப்பங்களில் தவிர, பிறகு இல்லை என்பதும் தெளிவாகும். மன்னரும் தேவியும் திகைப்புற்று இன்றும், இன்னும் நிற்கின்றதைக் காண்கிறோம். கோவில் ஆட்சி முறை திட்டங்கள் இராமானுஜன் (கி. பி. 1017—1137) பன்னிரண்டாம் நூற்றாண்டில் வகுத்தபடி, அப்போதும், இன்று வரையும் சிறிதளவாயினும் மாற்றுதற்கு இயலாதவைகளாக இருந்து வருகின்றன.

78. இனிச் சென்றால், வடமேற்கு மூலையில் யாகசாலையுள்ளது. ஸ்ரீ ரெங்கநாதன் பிரம்மோத்ஸவங்களில் இவ்விடம் எழுந்தருளி திருமஞ்சனம் செய்துகொண்டு, பஞ்சகுண்ட ஹோமங்களைச் செய்துவிட்டு, சந்நிதிக்கு எழுந்தருளுகிறார். யாகப்பேரர் என்கிற திருவரங்க மாளிகையார் இவ்விடம் வந்திருந்து மற்ற நாட்களில் நடக்க வேண்டிய யாகங்களை நடத்துகிறார். இதற்கு வெளியிலும், எதிரிலும் இருப்பது தொண்டைமான் ராஜாவால் கட்டப்பட்ட தொண்டைமான் குறடு என்னும் மேடையாகும்.

79 இனி இப் பிராகாரம் வலம் வரும் வழியில், தொண்டைமான் குறட்டிற்கு அடுத்து, தனிச் சந்நிதியாக விளங்குவது தர்மவர்மாவினால் எடுப்பித்த, விஸ்வக்சேனர் என்ற சேனைமுதலியாரதாகும். இவர் ஸ்ரீரெங்கநாதரது மந்திரியும் சேனைகளுக் கெல்லாம் அதிகாரியுமாவர். மூலவர் அமர்ந்த திருக்கோலம், எழுந்தருளும் திருமேனி நின்று கொண்டு ஆக்ஞை செய்வது போலிருக்கிறது. இவருக்கு ஒரு புறத்தில் ஹனுமாரும், மற்றொரு புறத்தில் விபீஷணரும் மந்திராலோசனை சபையாளராக நிற்கின்றார்கள். ஸ்ரீ ரங்கநாதனுடைய கட்டளைகள் இவர் மூலம் நடக்கவேண்டும்: ஸ்ரீ ரங்கநாதர் வெளியில் எழுந்தருளும் போதெல்லாம் தம் இராஜாங்கப் பொறுப்பை இவரிடம் ஒப்புவித்துத் தான் வெளியில் போவதும், திரும்பி வந்ததும், இவருக்குப் பிரதிநிதியான

கோவில் மணியக்காரருக்குத் தனது மாலையை அனுக்கிரகிப்பதும் வழக்கமாயுள்ளது. ஸ்ரீ ரங்கநாதனுக்கு நிவேதனமாகும் சகல பிரசாதங்களும், இவருக்கு நிவேதனம் செய்யப்படுகிறது. பெருமாள் உத்ஸவங்களுக்குப் பாலிகை தெளிக்க மண்ணெடுக்க ஆதி பிரம்மோத்ஸவம் தவிர, மற்ற உத்ஸவங்களில், ஹனுமாருடன் தாயார் சந்நிதி சென்று மண்ணெடுத்து வருவார். ஆதி பிரம்மோத்ஸவத்திற்கு விபீஷணர் கூடச்செல்வார்.

80. **அர்ச்சுன மண்டபம்,** சேனை முதலியார் சந்நிதிக்கும் கீழ்புறமிருக்கும் மேடையான பரந்த மண்டபமாகும். இதில் பெருமாளுக்கு பகல் பத்து, பத்து நாளும் உத்ஸவம் நடக்கிறது. ஆழ்வார், ஆசாரியர்களுடனிருந்து அரையரால் அபிநயத்துடன் ஒப்புவிக்கப்படும் திருவாய்மொழிப் பிரபந்தத்தை ஸ்ரீ ரங்கநாதன் கேட்டருளுகிறார். பத்தாம் நாள் சாயந்திரம், மோகனாவதாரத்துடன் இம் மண்டபத்திலிருந்து புறப்பட்டுப்போகிறார். கைசிக ஏகாதசி, ஸ்ரீ ராம நவமி விழாக்களிலும் இம் மண்டபத்துக்கு ஸ்ரீ பெருமாள் எழுந்தருளுகிறார்.

81. **குலசேகர நாச்சியார்** என்னும் சேரகுலவல்லி சந்நிதி, அர்ச்சுன மண்டபத்தின் வடமேற்கு மூலையிலிருக்கிறது. சந்நிதி முதலில் சுந்தரபாண்டியனாலும், பின்னர் கூரநாராயண ஜீயராலும் புதுப்பிக்கப்பட்டது. சேரகுலவல்லி குலசேகர மன்னனின் திருமகள், அழகிய மணவாளனாகிய ஸ்ரீ ரங்கநாதனுக்குத் தன் மனதைத் தந்து அவருடன் ஐக்கியமானாள். ஆதலின் சேரகுலவல்லி நாச்சியார் என்ற பெயருண்டாயிற்று. குலசேகர மன்னன் (ஆழ்வார்) தன் மகளை ஸ்ரீ ரங்கநாதனுக்கு அர்ப்பணம் செய்ததுமன்றி தனது பொருள் யாவையும் ஸ்ரீதனமாகப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார். சேரர்குலவல்லியின் உத்ஸவத்திருமேனி, துருக்கர் காலத்தில், டில்லிக்கு கொண்டுபோனது திரும்பவில்லை. ஸ்ரீ ராம நவமி யன்று அர்ச்சுன மண்டபத்தில் ஸ்ரீ ரங்கநாதனுடன் ஒரே ஆசனத்திலமர்ந்து காட்சியருளுகிறார்.

82. **சுல்தானி** என்னும் **துலுக்க நாச்சியாரது சந்நிதி** யும் இதன் சமீபத்தே உள்ளது. சந்நிதியில் நாச்சியாரை சித்திர ரூபமாக வரைந்துள்ளது. (இவரது வரலாறு முற் கூறப்பட்டுள்ளது காண்க. பக்கம் 15). இந்த நாச்சியாருக்கு ஸ்ரீ ரங்கநாதன் பகல் பத்து, பத்துநாளும் சேவை சாதிக்கவே, இந்த சந்நிதி முன் படியேத்தம் நடை பெறுகிறது.

83. இனி, அர்ச்சுன மண்டபத்திற்கு முன்பாக இருப்பது **ரேவதி மண்டபமாகும்**, இதில் ஸ்ரீ ரங்கநாதன் தனது நக்ஷத்திரமான ரேவதி அன்று, எழுந்தருளித் திருமஞ்சனம் முதலானவை கண்டருளுகிறார்.

84. ரேவதி மண்டபத்திற்கு தெற்கிலும், அர்ச்சுன மண்டபத்திற்குத் தாழ்வாகவுமுள்ளது **கிளி மண்டபம்**. இம்மண்டபத்தில் கிளிக் கூடுகள் பல கட்டப்பட்டுள்ளன. பகல் பத்து உத்ஸவத்தில் அருச்சுன மண்டபத்திற்கு இதன் வழியாகவே ஸ்ரீ பெருமாள் எழுந்தருளுகிறார். இம்மண்டபம் திருமங்கை மன்னனால் புதிப்பிக்கப் பெற்றது. இம்மண்டபத்தில் ஓரிடமிருந்து, பரவாசு தேவரைச் சேவிக்கலாகும்.

85. இதன் தென்கிழக்குமூலையிலுள்ளது **கிருஷ்ணன் சந்நிதியாகும்**. இங்கு கிருஷ்ணன், அவர் தந்தை வாசு தேவர், அவர் பத்தினியாகிய தேவகி, ரோகினி முதலியவர்கள் திருமேனி கொண்டுள்ளனர். வாசுதேவர் கிருஷ்ணனுக்காக ஒரு கையில் பால்குடமும், மற்றொரு கையில் பால்போட்ட பாலடையும் வைத்துக்கொண்டிருக்கிறார். ஸ்ரீ ஜெயந்தி, உறியடி இந்த இரண்டு நாளும், இச் சந்நிதியில் வழி நடக்கிறது.

86. மேற்குறித்த சந்நிதிகள் அடங்கிய கிளிமண்டபம் சமீப காலத்ததாகும். இதன் தூண்களும், மேல் தளத்தைத் தாங்கும் புஷ்ப போதிகைகளும், அவைகளின் பூ முனைகளும் இதன் சமீப காலத்தையே விளக்கும். சிற்ப வளர்ச்சியில், போதிகைகள் கட்டடங்களின் காலத்

தைக் காட்டும் காலக்கண்ணுடி என்னலாம். பல்லவர் காலத்துப் போதிகைகள் சாதா போதிகை என்றும், பிற்காலச் சோழர் காலத்தவை, தரங்கு போதிகை யென்றும் விஜயநகர, தற்காலப் போக்கில் புஷ்ப போதிகையும் இதன் நிர்ணயங்களாகும்.

87. இம் மண்டபத்திற்கு அடுத்தபடியாக உள்ளது ஸ்ரீநிவாசனது அழகிய கற்கள் பதித்த வர்ணப்படம். அஷ்டப் பிரபந்தம் பாடிய பிள்ளைப் பெருமாளையங்கார் ஸ்ரீரங்கநாதனிடம் அதிக பக்திகொண்டு, ஸ்ரீநிவாசனைப் பாடமாட்டேனென்று சொன்னபோது, தானே ஸ்ரீநிவாச னென்றும், ஸ்ரீநிவாசனே தானென்றும் தெரிவித்தற் பொருட்டு ஸ்ரீரங்கநாதன் இந்த இடத்தில் ஸ்ரீநிவாசனுகச் சேவை சாதித்தார். அதை ஞாபகமூட்டும்படியாக இங்கு ஸ்ரீநிவாசனது அழகிய திருக்கோலத்தை வர்ணப்படமாக வரைந்துள்ளது.

88. இனி நம்முன் காண்பது ஸ்ரீ ரங்கநாதனின் சந்நிதி வாயிலிலுள்ள ஓர் உயர்ந்த அழகியமணவாளன் திரு மண்டபம், சந்தன மண்டபம் என்று பெயர். சேவார்த்திகள் ஸ்ரீ ரங்கநாதனின் விசுவ ரூபத்தையும் நிவேதனங்கள் முதலானவை நடந்து தீபாராதனை நடக்கும்போதும் இங்கு நின்று சேவிப்பார்கள். இந்த மண்டபத்தில் ஏகாதசி, அமாவாசை முதலான பஞ்ச பருவங்களில் ஸ்ரீ ரங்கநாதன் இம்மண்டபம் எழுந் தருளித் திருமஞ்சனம் முதலானவை கண்டருளுகிருர். ஸ்ரீ ரங்கநாதன் திருச் சந்நிதி வாயிலுக்கு எதிரில் தாம்பிரத்தில் செய்த சந்நிதி கருடன் சதா சேவையில் இருக்கக் காண்கிரோம். திருமேனி வயோதிகராயும் பெரியவராயும் தோற்றமளிக்கிறது. துவஜாரோகண காலங்களில் இவ்விடமிருந்தே கருடன் துவஜப்படத்திற்கு ஆவாஹனம் செய்யப்படுகிருர். துவஜ அவரோகண மானபின் துவஜத்திலுள்ள கருடனைத் கடத்தில் ஆவாஹனம் செய்து வந்து, இவருக்கு அபிஷேகம் நடக் கிறது. இக்கருடன் சந்நிதிக்கு மேற்கிலுள்ளது பெரிய

நிலைக் கண்ணாடிகளால் நாற்புறச் சுவர் முழுதும் பதுப்பித்த அழகிய கண்ணாடி அறை. பிரம்மோத்ஸவங்களில் பெருமாள் உற்ஸவம் முடியும் வரையில் இக்கண்ணாடிகளால் அலங்கரிக்கப்பட்ட அறையில் இராத் தங்குவார். இங்கு ஸ்ரீரங்கநாதனை சேவிப்பது ஒரு திவ்ய தரிசனமாகும்.

89. இந்த அழகிய மணவாளன் திருமண்டபத்துக்குக் கீழ்புறமும் மேல் புறமும் ஏறும் சுருள் யாழிப் படிகள் உள்ளன. இந்தப் படிகள் வழியாய் பெருமாள் ஏறும்போது படியேத்தம் நடக்கும். சைவக்கோயில்களில் பஞ்சாக்ஷரப்படிகள் எப்படி அமைந்துள்ளனவோ அது மாதிரி இவை ஸ்ரீரங்கநாதனின் அஷ்டாக்ஷரப்படிகளாகும்.

### 1-வது ஸ்ரீரங்கநாதன் திருச் சந்நிதிப் பிராகாரம்.

90. இவைகளுடன் இராஜமகேந்திரன் திருவீதி என்ற இரண்டாம் பிராகாரம் அமைய, சேவார்த்திகள், இவ்வழகிய மணவாளன் மண்டபமிருந்தே, ஸ்ரீ ரங்கநாதனின் திருச் சந்நிதியையடைதல் வேண்டும். இத் திருச் சந்நிதியை வெளியே துவாரபாலகர், ஜய விஜயாள் காப்புச் செய்கின்றனர். அதன் மணிக் கதவுகள் மணிகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. சந்நிதிக்குள் நுழைவது திருவணுக்கன், திருவாயில் அதாவது பெருமாளுக்குப் பக்கத்திலிலுள்ள திருவாயில். இந்த வாயிலை ஒட்டி உள்புரத்தில் 'திருமணத் தூண்' என்று இரண்டு ஸ்தம்பங்கள் உள்ளன. அவை, விமானத்தின் மேலிருந்து சேவை சாதிக்கும் பரவாசுதேவரின் கால்களாக அமைக்கப்பட்டுள்ளன. இந்தத் தூண்களின் பக்கத்திலிருந்து தான் பெருமாளை சேவிப்பது ஆதிகாலத்து வழக்கம். இப்போது உத்ஸவருக்குப் பக்கத்திலுள்ள குலசேகரன் படிக்குப் பக்கம் நின்று சேவிக்கின்றனர்.

91. இத் திருவாயில் உள் நுழைந்ததும் விமானப் பிரதக்ஷணமாகிய திருவிண் ஆழி சூழப்பெற்ற திருச்சந்நிதியை அடைகின்றோம். அதனைச்சுற்றி வருவது தருமவர்மச்

சோழனால் உண்டாக்கப்பட்டதும், ஸ்ரீரங்க விமானத்தைச் சுற்றிலுமுள்ளதுமான தர்மவர்மாவின் திருவீதியாகும். ஸ்ரீரங்க விமானம் சப்தப் பிராகாரங்களுக்கும் மத்தியிலுள்ளது பிரணவ ஆதாரமாயிருக்கிறது. நான்கு வேதங்களும் சாத்திரங்களும் தூபிகளாயுள்ளன. பரவாசுதேவர் இதிலிருந்து சேவை சாதிக்கிறார். விமானத்தின் வெளியில், மேல் பக்கத்தில் (விக்னேசுவரரும்) கஜானனும் கீழ்பக்கத்தில் ரங்கநாதனின் யோக மாயையாகிய துர்க்கையும், விமானத்தை காவல் காத்து வருகின்றனர். இதனை இன்னும் விளக்குவார் திவ்ய கவி பிள்ளைப் பெருமாளய்யங்கார்:

" அருமறை போதிய வோ ரெட்டெழுத்தும்
...... எங்கோன் விழிதுயில் கொண்டருளத்
திருமதிலேழும் விமானமுமாகிச் சிறக்கின்றனவே "
—திருவரங்கத்துமாலை – 95.

அதாவது அஷ்டாக்ஷரத்திலுள்ள பிரணவம் விமானமாகவும் "நமோ நாராயணாய" என்கிற ஏழு எழுத்துக்களும் ஏழு பிராகாரங்களாகவும் பிரகாசிக்கின்றன என்பது பொருட்படுகிறது.

இதன் முன் பாகத்தில் நிற்பது காயத்திரி மந்திர ஸங்கையாக 24 தூண்களால் அமைக்கப்பட்ட காயத்திரி மண்டபம், இந்த மண்டபத்தின் மத்தியில் பெருமாளுக்கு தளிகைகள் சமர்ப்பிக்கும் அமுது பாறை யுள்ளது. பிராகாரத்தின் நான்கு மூலைகளிலும் நாராயணர், நாபி நளினர், நாகசயனர், நரசிம்மர் என்பவர்கள் ரங்க விமானத்திற்கு காவல் புரிகின்றனர். இதனுள் முதற் கண் புலப்படுவதே வட்ட வடிவமாயுள்ள திருவரங்கம், அதன் முதலடியில், (கஜநாதர்) (கணநாதரான தும்பிக்கையாழ் வாரும்) அதன் வலக்கடைசியில் துர்க்கா தேவியும் காப்புச் செய்கின்றனர். இதன் சிகரமே பொற்றகடால் வேயப்பெற்ற ஸ்ரீ ரங்க விமானம். முன்னர் ஒரு இலட்சம் ரூபாய் செலவில் வேயப்பெற்ற பொற்றகடுகளுக்கு மேற்



ஸ்ரீரங்க விமானம்
(முன் தோற்றம்)



ஸ்ரீரங்க விமானம்
(பக்க தோற்றம்)

பாகம், சமீபத்தில் 1942-ல் மறுபடியும், ஸ்ரீ ரங்கநாத ஜீயரின் நன் முயற்சியால் 79 ஆயிரம் செலவில் ஆயின மையும் புதிய பிரதிட்டையாயினதும் குறிப்பிடத் தகுந்ததாகும்.

92. இத் திருவிண்ணுழியின் சுற்றிய முப்புரச் சுவரி லும் சுமார் 350 ஆண்டுகட்கு முற்பட்டதும், நூற்றெட்டு வைணவ திருப்பதிகளின் உண்மைத் தோற்றங்களைப் புகைப்படம் பிடித்துக் காட்டுவனபோல் அழகிய வர்ண ஓவியங்களுள்ளன. அதன் விபரங்கள் அடங்கிய தெலுங் குக் குறிப்புகளும் ஒவ்வொன்றின் கீழும் உள்ளன. இன் னும் மேற்றட்டில் ஸ்ரீரங்க மகாத்மியம், விஷ்ணு புராணம் இன்னும் இராமாயணச் சரிதைகளைக் காட்டும், பல ஓவியங்களும் தீட்டப்பெற்றுள்ளன. இவைகளிற் பெரும் பாகம் கால வகையினுலும், போற்றப் பெருத தன்மையா லும் மிகவும் பழுதுபட்டுள்ளன.

93. இவற்றைக் கண்ணுற்றும், வலம் வந்து, திருச்சந்நிதியின் முன், பக்தனின் முன்னர் சேவை சாதிப்பவர் ஸ்ரீரங்க விமானத்தின் கீழும், பாம்பணையின் மீதும் ஐந்து தலைக்கொண்டு கூடிய ஆதி சேஷன் குடைநிழற் பள்ளி கொண்டு அரிது துயிலமர்ந்த ஸ்ரீரங்கநாதனே. இவர் தமது வலது கையால் தமது திருமுடியையும், இடது கையால் தமது திருவடிகளையும் காட்டி, தாம் சகல உலகினுக்கும் நாதனென்றும், எல்லோரும் தமது திருவடிகளைப்பற்ற வேண்டுமென்றும், போதிக்கின்ருர். அவருக்குச் சற்றே முன்னிலையில், திருவிழாக் கண்டருளும் ஸ்ரீரெங்கநாதனின் திருமேனி யும், ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவிகளும் கலியாண திருக்கோலமாக உள்ளனர். இவர்களுக்குச் சற்றே மேற்புறம், ஸ்ரீரங்கநாதன் துருக்க கலாபத்தின் காரணமாக 62 ஆண்டுகளுக்குமேல் வெளியே தங்கிய போது இங்கு அவரது பிரதிநிதியாக விளங்கிய திருவரங்க மாளிகையார் என்ற யாக பேரரும் காட்சி அளிக்கின்ற னர். இங்கு சேவார்த்தியாகிய பக்தன், அரங்கனின்

திருமேனிப் பேரழகிலும், திருவருட் பிரசாதத்திலும் ஈடுபட்டு, தன்னுணர்ச்சி தளர்ந்து பரவசம் மேலிட்டு, திருமங்கையாழ்வாருடன்

" குலந்தரும் செல்வம் தந்திடும், அடியார் படுதுயர்
ஆயின வெல்லாம்
நிலந்தரும் செய்யும், நீள்விசும்பு அருளும், அருளொடு
பெரு நிலம் அளிக்கும்
வலந்தரும், மற்றும் தந்திடும், பெற்றதாயினும் ஆயின
செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்,
நாராயணா என்னும் நாமம் "

எனவும், பிறவும் சொல்லி, அவனருட் பெறுகின்றான். அடியார் வாழி. அரங்கநாதர் வாழி.

---

## திருவாபரணங்கள்.

94. சேர, சோழ, பாண்டிய ஹொய்சாள விஜயநகர, நாயக்கர் மன்னர்களால் ஆராதிக்கப் பெற்ற ஸ்ரீ ரங்கநாதனின் ஆபரணாதிகள் மிகப்பழமையும், சிறந்தவையுமாகும். தென்னாட்டு அரசியல், முகமதிய, ஆங்கில, பிரஞ்சிந்திய குழப்பங்களில் பெரிதும் பாதிக்கப்பட்டதன் காரணமாகக் கொள்ளை போகியவைபோக எஞ்சி நிற்பது சிலவே. பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1251 – 1268) தனது வெற்றிகளுக்கப்பால், தான் கொணர்ந்த பொருட்குவையால் இங்கு துலாபார தானம் செய்தும், பதினெட்டு இலட்சம் பொருமான பொன்னால், பொன்வேய்ந்தான். மற்றும் பதினெட்டு இலட்சம் பொன்னைக் கொண்டு பல துலா புருஷ மண்டபங்களையும், இங்கு வளைத்தான் என ஒரு கல்வெட்டுக் குறிக்கிறது. (Vide A.R.E. 1912. P. 142.) இவரது பொருட்கொடை மேற் குறித்த குழப்பங்களில் தப்பியதென்று கூறுவதற்கில்லை. அவன் இங்கு வளைத்

துள்ள கற்பணிகளே பொற் பணிகளாக இன்றும் விளங்கு கின்றன. ஆயினும் ஒன்று. ஸ்ரீ பெருமாள் உவந்து அணிந்துகொள்ளும் கிரீடங்கள் பல உள. ஒவ்வொரு விழாவிற்கும் அந்தந்த அவசரத்திற்குமாக அவர் அணிப வற்றுள் பாண்டியன் கொண்டை என்பதும் ஒன்று. மற்றவற்றுள் மார்கழி விழாவில், மோஹினி அலங்காரத் திற்கு அணியும் கிரீடம் தனிப்பட்ட அழகும் பெருமையும் உடையது.

பாண்டியர்களுக்குப் பின், விஜயநகர நாயக்க மன்னர் கள் கொடுத்த திருவாபரணங்களே இப்போதுள்ளவை யும், அவர்களது தீவிர பக்தியையும் வள்ளன்மையையும் விளக்குபவன அவை கிருஷ்ணப்ப நாயக்கரும் (கி. பி. *1573-1595*) அவர் மைந்தர் குமார கிருஷ்ணப்ப நாயக்கரும் (கி. பி. *1595-1602*) கொடுத்த இலட்சத்து ஐம்பதினுயிரம் பொருமான இரத்தின அங்கியும், இரத்தின கிரீடமு மாகும். இதனை குமார நரஸிம்ம வாதூல தேசிகர் பிரதிட்டை செய்தாரென கோயிலொழுகு (*150-151*) கூறுகிறது. இன்னும் ராணி மங்கம்மாள் (கி. பி. *1689-1704*) உவந்தளித்துள்ள இரத்தின அங்கியும் சிறப்புடையது. மொத்தமான பொற்றகட்டின் மீது, வைரம், வைடூரியம், மரகதம், இரத்தினம் முதலிய நவரத்தினங்களால் இழைக்கப்பெற்றதும் பதினேரு பாகங்களால் ஆக்கியதுமாகும். இதன் பொருமானம் பத்து இலட்சம் என்பர். இன்னும் விஜயரங்கசொக்கநாத நாயக்கர் (கி. பி. *1704-1731*) கொடுத்த முத்தங்கியும் சிறப் புடையது. மார்கழி உத்ஸவத்தில் பெருமாள் மூலவர் ஆறு நாள்கள் இதனை உவந்தருளுகிறார். இது முழுதும் நல் முத்துக்களால் கோர்க்கப்பட்டதும், ஒன்பது பாகங் களால் ஆயதுமாகும். இதன் பொருமானம் பதினேரு இலட்சமென மதிக்கப்படுகிறது. ஸ்ரீ பெருமாள் இதனைச் சாத்திக்கொண்டிருப்பதை காணுவது ஒரு பெரும் பேறென திரளாக ஸேவார்த்திகள் இதனைப் பார்த்தும், பெருமாளைத் தெரிசித்தும் பேறு பெறுகின்றனர்.

மற்றும் ஆபரணங்கள் பலவற்றுள், பங்காரு திருமலை கொடுத்துள்ள தங்கத் தடியும், ஏழாவது எட்வர்ட் அரசர் 1875-ல் இங்கு வந்தபோது உவந்தளித்த தங்கத் தட்டும், தெற்கலரையுள் வைக்கப்பட்டுள்ளன. திரு அரங்கப் பெருமானின் திரு ஆபரணங்களின் அட்டவணை பெரிதாம். அரங்கனின் சேவார்த்திகள் ஆர்வத்திற் கிடையே அது வளர்ந்துகொண்டு வருகின்றது. அரங் கனின் அழகினைக் கண்டு அழகுபடுத்திப்பார்ப்பதின் காரணம் தான் இவை.

---

## திருவிழாக்கள்.

97. ஸ்ரீ ரங்கநாதன் ஆண்டில் தினமும் விழாக் கொள்கிருரென்ருல் மிகையாகாது. திருக்கோயிலின் விசேஷ, நித்திய, மாத, ஆண்டு விழாக்கள் யாவும் ஒன்று விடாது அவ்வப்பொழுது, கோயில் திட்டத்தின்படி மிகக் கவனத்துடனும் சிரத்தையுடனும் நடந்து வருகிறது. சித்திரை தொடங்கி பங்குனி முடியும் வரையான சிறப்புக் கள் கீழ் வருவனவாம்.

**சித்திரை :** சித்திரை மாதம் முதற் தேதி வருஷப் பிறப்பு, பர்வோத்ஸவமாக பெருமாள் புறப்பாடுடன், திருமஞ்சனம் கோஷ்டி, எழுந்தருளுதல் யாவும் நடைபெறு கின்றன. இம்மாதம் கோடைத் திருநாள் என்று பத்துநாள் உத்ஸவமுமாம். இதனை பூச்சாத்துத் திருநாள் என்றும் சொல்வதுண்டு. 6 ஆம் திருநாள் முதல் பெருமாள் பூச்சாத்திக்கொண்டு துரை மண்டபத்தில், பெருமாள் திருமொழியோடு திருவாராதனம் கண்டருளி வீணைகானத்துடன் உள்ளே எழுந்தருளுகிருர்.

சித்திரா பௌர்ணமி தென் திருக்காவேரியில் திருமஞ்சனம் கண்டருளி மாலையில் கஜேந்திரமோக்ஷம் நடத்தி, ராத்திரி ஸந்நிதிக்கு வாத்திய முழக்கம் யாது மின்றி அரையர் பள்ளிசையுடன் திரும்புவார்.

ஸ்ரீ ராமநவமி அவதார ஜயந்திகளில் ஸ்ரீ ராமநவமியும் ஸ்ரீ ஜயந்தி மட்டுமே கோயிலில் நடைபெறுவது.

"ரேவதி" பெருமாளுடைய திருநக்ஷத்திரமாகையால், ரேவதி மண்டபத்தில் திருமஞ்சனம், திருவாராதனத்தின் போது அரை திருமாலை ஸேவிப்பார்.

இவற்றுள் **சித்திரை** பிரம்மோத்ஸவம் பத்து நாட்கள் நடைபெறுகிறது. 9 ஆம் நாள் திருத்தேரில் திருவீதிவந்து இறங்கி ரேவதி மண்டபத்தில் திருமஞ்சனம் செய்தருளு கிருர். பத்தாம் நாள் திருவீதி உலாவந்தும், உடையவர் ஸந்நிதிபோய் அவரை அனுக்கிரஹித்தும், சிறப்புடன் விழா முடிகின்றது. அடுத்த நாள் ஆடும் பல்லக்கில் பெருமாள் விடையாற்றியாக மண்டபம் எழுந்தருளி பூப்பல்லக்கில் திருவீதி வந்து உள்ளே எழுந்தருளுகிருர்.

**வைகாசியில்** பெருமாள் வஸந்தோத்ஸவம் ஒன்பது நாட்களும், **ஆனியில்** ஜேஷ்டாபிஷேகமும், **ஆடியில்** பதினெட்டு அல்லது இருபத்தெட்டாம் பெருக்குக்காக திருக்காவேரிக்கு எழுந்தருளி திருவுலாப்போதலும் நடைபெறுகின்றது.

**ஆவணியில்** ஸ்ரீஜயந்தி உறியடி கண்டருளியும், பவித்ரோத்ஸவம் ஒன்பது நாட்கள், ஆவணி சுக்ல ஏகாதசியில் ஆரம்பமாகி, கடைசி நாள் வாதூல தேசிகருக்கு பவித்திர மரியாதையுடன் முடிகிறது.

**புரட்டாசியில்** நவராத்திரி விழா ஒன்பது நாட்கள் நடைபெற்று, விஜயதசமியாகிய மகாநவமியன்று மாலையில் குதிரை வாகனத்தில் காட்டழகிய சிங்கர் தோப்பில் உள்ள வன்னிமரத்துக்கு பூசை நடந்து, அம்பும், வேலுடன் ஒவ்வொரு திக்கிலும் அம்புபோட்டு எழுந்தருளுகிருர்.

**ஐப்பசியில்** தினமும் பெருமாளுக்குத் தங்கக் குடத்தில் திருமஞ்சனம் வந்து உவந்தருளுகிருர். இன்

னும் ஒன்பது நாட்களில் பெருமாளுக்கு ஊஞ்சல் திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது. இம்மாதம் நாச்சியாருக்கும் ஊஞ்சல் விழா சிறப்பாக ஏழு நாட்கள் நடைபெறுகிறது.

இம்மாதத்தில், தீபாவளிச்சிறப்பும் ஒரு வைபவமாம். தீபாவளி முதல் நாள் பெருமாள் எண்ணெய் அலங்காரம் கண்டருளி கைங்கர்யபரர்களுக்கு எண்ணெய் சீயக்காய் அநுக்ரஹித்து, வாதூல தேசிகர் திருமாளிகைக்கு அலங்காரம் அனுப்புவார். நரக சதுர்த்தசி ஸ்நானம் ஆன பிறகு பெருமாள் தீபாவளி பண்டிகை உவந்தருளுகிறார். ஆழ்வார் ஆச்சார்யர்கள் புறப்பட்டு வந்து கிளி மண்டபத்தில் தங்குவார்கள். பெருமாள் புறப்பட்டு சந்தன மண்டபத்து முன் கொறட்டில் திருமஞ்சனம் கண்டருளி பின்னுலுள்ள மண்டபத்தில் எழுந்தருளுவார். ஜாலி அலங்காரம் வந்தபிறகு தீர்த்த விநியோகமும் ஜாலி அலங்காரமாவது, ஆயிரம் முழு ரூபாயாக இரண்டு பைகளில் கட்டி மேள தாளத்துடன் கொண்டுவந்து பெருமாள் திருவடிகளில் ஸமர்ப்பிப்பது, பெருமாள் உள்ளே எழுந்தளும்போது ஆழ்வார் ஆசார்யர்கள் ஒவ்வொருவரையும் அருள்பாடிட்டு தாம் உடுத்துக் களைந்த மீதக வாடையை அவர்களுக்கு ஸர்வாங்க மோஹனக் கைலியாகப் போந்து அனுப்பி உள்ளே எழுந்தருளுகிறார்.

**கார்த்திகையில்** கைசிக ஏகாதசிச் சிறப்பு ஒரு பருவ உத்ஸவமாகும். காலையில் பெருமாள் திருமஞ்சனம் கண்டருளி, இரவில் கைசிகப் புறப்பாடும், பகல்பத்து மண்டபத்தில் ஆஸ்தானமாகி, 360 போர்வை சாத்தி அவ்வளவு தாம்பூலம் கர்ப்பூர ஆரத்தி, திருக்குறுங்குடிப் பாசுர விண்ணப்ப வியாக்யானங்கள், பட்டர் கைசிக புராணமும் வியாக்யானமும் சேவித்து, சூரியோதயத்திற்கு முன்னரே பெருமாள் புறப்பட்டு மேலப்படி

* மற்றும் விபரம் பார்த்தஸாரதி அய்யங்கார் பதிப்பித்துள்ள கைசிக புராணத்தில் காண்க.

யில் படியேற்றம் கண்டருளி உள்ளே எழுந்தருளுகிருர். இச்சிறப்பின் புராண வரலாற்றினை வராக புராணத்தில் ஒரு அத்தியாயமாக கண்டுள்ளது காண்க. பட்டர்பிரான் இதற்கு வியாக்யானம் பண்ணி பெருமாளிடம் விண்ணப் பித்து, அப்போதே மேல்வீடு பெற்ற வைபவம் காண லாகும்.

இம்மாத விழாக்களுள், திருக் கார்த்திகை சிறப்பும் மற்ருென்ருகும். இது ஒரு பருவ உத்ஸவம். பெருமாளுக்கு காலையில் திருமஞ்சனமும், மாலையில் மடைப்பள்ளியில் அக்நிப் பிரதிஷ்டையாகி ஒன்பது தீபங்கள் ஏற்படும். உத்தம நம்பி அய்யங்கார் அவ் விளக்குகளைப் பெருமாள் திருமுன் வைத்து மரியாதை பெறுவார். உத்தம நம்பி, திருமாளிகை அடைந்ததும் தீப ஸ்தம்போத்ஸவமாகும். பெருமாள் செங்கழுநீர் வாசி கையில் புறப்பட்டு, சக்கரத்தாழ்வான் சந்நிதியிலிருந்து, சொக்கப்பானை கொளுத்தி நாச்சியார் சந்நிதியில் திருவந் திக் காப்பு கண்டருளி, உள்ளே வந்து, சந்தனமண்டபத் தில் வீற்றிருப்பார்: அரையர்கள் மூலம் பெரிய திருமொழி முதல் பாட்டு ''வாடினேன் வாடி'' விண்ணப்பங் கேட்டும், திருமங்கையாழ்வார் விருப்பின்படி, மேலே நடக்கப்போகும் மார்கழித் திருநாளுக்காக நம்மாழ்வா ருக்கு திருமுகப் பட்டயம் எழுதுவிப்பார்.

மார்கழியில் திருவாய்மொழித் திருநாளாகிய அத்யய னோத்ஸவம் மிகச்சிறப்புடையது. ஆண்டுதோறும் மார்கழியில் ஒவ்வொரு வைணவத் திருப்பதிகளிலும் சிறப்பாக நடைபெறுவது வைகுந்த ஏகாதசிச் சிறப் பாகும். அவற்றுளெல்லாம் ஸ்ரீரங்கத்தில் நடக்கும் இவ் வைபவம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் திருமங்கை மன்னனுல் ஆரம்பிக்கப் பெற்றபடி மிகச்சிறப்பாக நடை பெறுகிறது.

இம் மாதம் தனுர்மாஸமாகையின் சூர்யோதயத் துக்கு முன்னரே திருப்பள்ளி யெழுச்சி, ஆண்டாள்

திருப்பாவை விண்ணப்பத்தோடு, திருவாராதனம் தளிகை நிவேதனம் நடக்கும். சந்நிதி வாசலில் இந்த மாதம் முழுதும் வேத விண்ணப்பமும் நடைபெறும்.

திருவத்யயனோத்ஸவம், வைகுந்த ஏகாதசிக்கு முந்திய பத்து நாட்களும் பகற்பத்து எனவும், அதற்கடுத்த பத்து நாட்கள் இராப்பத்து எனவும், கொண்டாடப்பெறுகிறது.

98. முதல் நாள் இரவு ஸ்ரீ பெருமாள் திருவாயிலுக்கு முன்னுள்ள சந்தன மண்டபம் என்ற அழகிய மணவாள மண்டபத்து அருகில் அரையர்கள் நின்று கொண்டு பெரிய பெருமாளை ஸேவித்தவண்ணம் திருநெடுந்தாண்டகம், அபிநயம், வியாக்யானத்துடன் ஸேவிக்க பெருமாள் கேட்டருளுகிருர். மறு நாள் முதல் பகற்பத்து அர்ச்சுன மண்டபத்தில் அமர்ந்து முதலாயிரம், இரண்டாம் ஆயிரம், பெரிய திருமொழியையும், அபிநய வியாக்யானங்களுடன் அரையர்கள் பாடக் கேட்டருளுகிருர். வைகுந்த ஏகாதசியன்று, ஆண்டிற்கொரு முறையாக ரத்தினங்கி, ரத்தின கிரீடம் தரித்து பரமபத வாசல் வழியாக ஆயிரக்கால் திருமாமணி மண்டபத்தில் எழுந்தருளுகிருர். அன்று இராப்பத்து ஆரம்பமாகிறது.

இந்த இராப்பத்து; பத்து நாட்களிலும் ஸ்ரீ பெருமாள் ஆழ்வார்களுடன் வீற்றிருந்து நம்மாழ்வார் திருமொழி ஆயிரத்தையும், மறுநாள் இயற்பா ஆயிரத்தையும் மணவாளமாமுனிகளாலும் அமுதனுரைக் கொண்டும் கேட்டருளுகிருர். பகல்பத்து உற்ஸவத்தில் அபிநயம் வல்ல அரையர்களால் கம்சவதம், வாமனுவதாரம், அம்ருத மதனம், முத்துக்குளி, இராவணவதம் போன்ற புராணச் சரித்திரங்கள் நடித்துக்காட்டப்படுகின்றன. இதேமாதிரி இராப்பத்து 9-ம் திருநாள் ஆழ்வார் மோக்ஷ குலதாரத்தன்று ஹிரண்யவத நாடகம் பெருமாள் முன்னர் அபிநயிக்கப்படுகிறது. இவ் வைபவங்களில் தென்னுட்டாரும், வடநாட்டாரும் பெருந்திரளாகக்கூடி பங்குகொள்ளுகின்றனர்.

---

(மற்றும் விபரங்களை இந்நூலின் பின் சேர்க்கையில் கண்டுகொள்க.)



ஸ்ரீரெங்க விமானமும், வடக்கு கோபுரங்களின் தோற்றமும்.



சேஷராயர் மண்டபத்திலுள்ள சிற்ப வேலைகள்
(வெள்ளை கோபுரம் பக்கம்)

**தைமாதத்தின் சிறப்பு சங்கராந்தியாகும்:** காலையில் திருப்பள்ளியெழுச்சி திருவாராதனம் நைவேத்யம் ஆகி பெருமாள் உபய நாச்சிமார்களுடன் புறப்படுகிறார். வழியில் வந்து காத்திருக்கும் ஆழ்வார்களை அனுக்கிரகித்து, அவர்களோடு கூட ஆயிரக்கால் மண்டபம் வடகோடியில் ஆஸ்தானம் இருந்து திருப்பாவை சாற்றுமுறை கேட்டருளுகிறார். அரையர்கள் இருவர் பெருமாள் அருகே வந்து 30 பாட்டையும் தாளத்தோடு பாடுவார்கள். அப்போது அர்ச்சகர் பெருமாள் திருவடியில் திருத்துழாய் ஸமர்ப்பித்துக் கொண்டேயிருப்பார். துளசி, தீர்த்தம் முதலியவை விநியோகம் ஆகி, பெருமாள் உள்ளே எழுந்தருளுகிறார்.

**கனு.** காலையிலேயே பெருமாள் புறப்பட்டு வழியில் காத்திருக்கும் ஆழ்வார்களை அனுக்கிரகித்து அழைத்துக் கொண்டு ஆயிரக்கால் மண்டபம் முன் புரத்தில் ஆஸ்தானம் இருப்பார். திருவாராதனம் நான்கு விதமான தளிகை நைவேத்தியம் கண்டருளி குதிரை வாகனத்தில் புறப்பட்டு தெற்கு ராய கோபுரம் வரையில் வேட்டையாக வந்து உள்ளே எழுந்தருளுகிறார்.

**பூபதித் திருநாள்** சித்திரை பிரம்மோத்ஸவ வழக்கப் படி எல்லா விபரங்களுக்கும் நடைபெறும். திருத்தேரில் உபயநாச்சிமாரோடு பெருமாள் எழுந்தருளுவதும் தேரை விட்டிறங்கி ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதியில் கதிர் அலங்காரம் நடைபெறும். சித்திரைத் திருநாளில் குத்தகை விட்ட நிலங்கள் அறுவடையாகி நெல் கதிரை வெள்ளப்பிள்ளை யானை மேலேறி சிரசில் வைத்துக் கொண்டு திருவீதி சுற்றிவந்து பெருமாள் திருமுன்னர் சேர்ப்பது கதிர் அலங்காரம் என்பதாகும். சந்திர புஷ்கரணியில் தீர்த்தவாரி நடைபெறும்.

**மாசி:** தெப்பத் திருநாள் ஒன்பது நாள் நடைபெறும். இரவில் மட்டும் வாஹனம், காலையில் பல்லக்கு, எட்டாம் திருநாள் தெப்பம், உபயநாச்சிமாரோடு தெப்பத்தில்

எழுந்தருளி மூன்று சுத்து வந்து மய்ய மண்டபத்தில் விசேஷ நைவேத்யம் கண்டருளி மீண்டும் தெப்பமேறிக் கரையிலிறங்கி திருவீதி வலம் வந்து உள்ளே எழுந்தருளு கிறார்.

9-ம் திருநாளில்: தெப்பக்குளத்தில் ஸ்ரீ சடகோப மூலமாக தீர்த்தவாரி, திருமஞ்சனம் முதலியவை ஆகி சூர்யப்ரபையில் புறப்பட்டு பந்தக் காட்சி யென்னும் நூற்றுக் கணக்கான தீவட்டிகளோடு திருவீதி வந்து படிப்புக்கேட்டு உள்ளே எழுந்தருளுகிறார்.

பங்குனியில்: ஆதி பிரம்மோத்ஸவம், சித்திரைப் பிரம்மோத்ஸவம் போல நடைபெறுகிறது. இரண்டாம் நாள் இரவிலேயே பெருமாள் புறப்பட்டு. கொள்ளிடத்தி லிறங்கி வடகரையில் உபயங்கள் கண்டருளி கொள்ளிடம் வழியாகவே தெற்கில் வந்து தென்திருக்காவேரி போய், அங்கே தென்கரையில் ஜீயபுரம் துரையில் சூர்யோதய சமயத்தில், உடையவர் பண்ணிவைத்த அம்மையார் தண்ணீர்ப்பந்தல் உபயம் அமுது செய்து, அங்கேயே தங்கு வேட்டையாயிருந்து இரவு கோயிலுக்கு எழுந்தருளு கிறார். பத்து மைல் தூரமும் பெருமாள் பல்லக்கிலேயே எழுந்தருளுகிறார்.

6-ம் திருநாள்: உறையூரில் நடைபெறுவது. உறையூர் நாச்சியாரான சோழமன்னனின் திருமகளை ஸ்வயம் வரமாக மணந்து அங்கே அவளுக்கு கோயில் உண்டாக்கி, தானும் அதில் நின்ற திருக்கோலமான மூல விக்கிரஹமாய் இருக்கிறார். நாச்சியாரின் உத்ஸவமூர்த்தம் பெருமாள் திருவடியின் முன்புறத்தில் சேவை சாதிக்கிறார். இங்கே பெருமாளுக்கு உத்ஸவ மூர்த்தி இல்லை.

8-ம் திருநாள்: எல்லைக் கரையில் பெருமாள் ஆஸ்தான மாகயிருந்து, முன்பு திருவானைக்காவல், ஸ்ரீரங்கம் எல்லைச் சண்டையில் தன்னை அர்ப்பணம் செய்த வேலேந்தி தாஸரை யானைமேல் வைத்து அவருடைய திருமாளி

கைக்கு அனுப்பியதன் ஞாபகார்த்தமாக அந்த வமிசத்தாருக்கு யானையேற்ற வரிசை கொடுத்து, இரவில் குதிரை வாகனத்தில் புறப்பட்டு, திருவீதி சுற்றி உள்ளே எழுந்தருளுகிறார்.

9-ம் திருநாள் : பங்குனி உத்தரமாகும். இன்று ஸ்ரீரங்க நாச்சியாருக்கு திருநக்ஷத்திரமான திருவுத்திரத்திருநாள். பிரதான பிராட்டியாராகிய அவளுடைய அவதார தினத்தில் அவளைக்காணப் பெருமாள், இன்று காலை திருவீதி சுற்றி வந்து, அவளுடைய திருக்கோயிலுக்குப் போகும் பொழுது, முந்தாநாள் நேர்ந்த உறையூர் நாச்சியார்கோயில் சென்று வந்ததை நினைத்து அவள் பிரணய கலகமாகத் தடைபண்ண, நம்மாழ்வார் வந்து சந்நிதி செய்த பிறகு ஏகாஸனமாக வீற்றிருப்பார்.

இந்த திருச்சேத்தியிலேயே, முன்னர் உடையவர் சரணாகதி பண்ணி கத்யத்ரயம் அருளிச் செய்தபடியே கத்யத்தை விண்ணப்பிப்பது. பிறகு இருவருக்கும் திருமஞ்சனமாகும். மறுநாள் உதயம் நாச்சியாரை சேர்த்திக்கு அனுப்பிவிட்டு பெருமாள் கோ ரதத்தில் திருவீதி சுற்றி சந்நிதிக்கு எழுந்தருளுகிறார்.

புத்தாண்டு நாளாகிய ஸம்வத்ஸராதி வைபவம், சகலமும் தீபாவளிச் சிறப்புப்போலவே, நடந்து ஜாலி அலங்காரத்து முன்பு பட்டர், சிஷ்யர், கோயில் வாத்தியார், புதுப் பஞ்சாங்கம் வாசிப்பதாகும்.

இத் திருவிழாக்களுடன் ஆழ்வார்கள், ஆசார்யர்கள், திருநக்ஷத்திரத்தன்று பெருமாள் நாச்சியார் ஆண்டாள், இவர்களது சந்நிதி வந்து மங்களாசாஸனம் பண்ணி, திருவீதிவலம் வந்து தம் கோலுக்கு எழுந்தருளுவார்கள். பெருமாள் அவர்களுக்கு தம்முடைய உள் சாத்து, மாலை, சந்தனம், பிரசாதம் அனுப்புவார்.

பட்டர் மணவாள மாமுனிகள், முதலான சிறு மூர்த்திகளான ஆசார்யர்களுக்கு மங்களாசாஸனத்துக்காக புறப்

பாடு இல்லாமல் கோஷ்டி முதலான எல்லா வரிசைகளும் உண்டு. இன்னும் ஸ்தலத்தார்களாகிய ஜீயர், பட்டர், வாதூல தேசிகர் முதலானவர்களுடைய திரு நக்ஷத்திரங்களை யொட்டி, அவர்களது மடத்துக்கும், திருமாளிகைகளுக்கும், அந்தந்தத்தினங்களில் பெருமாள் அலங்காரம் அனுப்புகிறார்.

இவ்வாறாக திருவரங்கப் பெருமானின் உத்ஸவ வைபவங்கள் ஆண்டில் பொதுவாக ஒவ்வொரு நாளும் நடைபெறுவது என்றால் தகும்.

---

## கல்வெட்டுக்கள்.

இக்கோவிலில் கல்வெட்டுக்கள் 353-ம் தாமிர சாசனங்கள் பதின்மூன்றுமாகும். இவற்றுள் பல, படியெடுக்கப்பட்டு முழுதும் வெளியிட்டும், இன்னும் அதிகமானவை பற்றி குறிப்புகள் மாத்திரமே வந்துள்ளன.

இவை, இந்நாட்டை ஆண்ட சோழர், பாண்டியர், ஹொய்சாளர், விஜயநகர நாயக்க மன்னர், சேர மன்னர், இக்கோயில் தொடர்பு கொண்டதை விளக்கும்.

1. சோழர்கள்: விஜயாலயன், ஆதித்தன், கல்வெட்டுக்கள். பெருமாளை அரங்கத்துப் பெருமாளடிகள் எனக் குறிப்பன.

2. பராந்தகன் I. Ins 71—2—1892 திருவிளக்குக்காக பொன் கொடுத்தது.

3. குலோத்துங்கன் I. 1070—1118. திருவரங்கத் தாழ்வான் சந்நிதியில் குலசேகரர் பிரபந்தங்கள், திருவாய்மொழி, திருப்பள்ளி எழுச்சி பாடுவதற்காக நிவேதனம்.

---

* மற்றும் விபரங்களுக்கு பார்த்தசாரதி அய்யங்கார் "உறையூர் நாச்சியாரும் பங்குனி உத்திரமும்" என்ற நூலில் காண்க.

4. குலோத்துங்கன் III. அழகிய மணவாளப் பெருமாள் சந்நிதியில் விளக்கு தானம்.

5. இராஜேந்திரன் III. 1246—1267. உறையூர் சென்னையா பாலதேவனைப்பற்றியது.

---

## பாண்டியர்கள்.

6. மாரவர்மன் சுந்தரபாண்டியன் I. கி. பி. 1216. கோயில் இராசமகேந்திரன் திருவீதி மண்டபத்தில் கூட்டிய கூட்டமொன்றில் கோயில் நிர்வாகத்தை சீர் திருத்தியது பற்றியது.

7. ஜடாவர்மன் சுந்திரபாண்டியன் கி. பி. 1253—54 வடமொழியில் உள்ள கல்வெட்டு. தான் வீரசோமேசுரன் என்ற அரசனைக் கொன்று, ஸ்ரீரங்கத்தை கைப்பற்றிய தாக உள்ளது. தான் சோழ, கேரள, ஹொய்சாள அரசர் களை வென்று, கொண்டுவந்த திரவியத்தால், தான் துலா பாரம் செய்ததும், 18 லட்சம் கொண்டு பொன் வேய்ந் ததும், 18 இலட்சம் கோயில் திருப்பணிக்குமாக செல விட்டதாகவும் கூறுகிறது. Ins. 60/1892.

8. ஹொய்சாளர் நரசிம்மன் II தான் ஸ்ரீரங்கத்தைக் கைப்பற்றியதாகவும், 1222 கி. பி. அவன் மகன் சோமேசுவரன், ஸ்ரீரங்கத்துக்கு அருகாமையில் விக்ரம புரம் என்ற கண்ணனூரை தனது இரண்டாவது தலை நகராக்கிய செய்தி.

9. அவன் மகன் இராமநாதன் : பெரிய பெருமாளுக்கு நந்தவனம் வைக்க இரண்டு தோட்ட நிலங்கள் கொடுத்த தாக Ins. 51—52/1892.

10. சாளுவ திம்மா : பல கிராமங்களின் தீர்வைகளை கோவிலுக்கு தானம் செய்ததாக. Ins. 59—1895.

கேரள இரவிவர்மன் : Ins. 46—1891.

11. **கோபண்ணு :** Ins. 55—1892. துருக்கர் காலத்தில் ஸ்ரீ பெருமாள் வெளியே கொண்டு போகப்பட்டு, கலாட்டா அடங்கியபின் பெருமாளை ஸ்ரீரங்கத்தில் மறுபடியும் பிரதிட்டித்ததாக செய்தி.

12. **பொன்வேய்ந்த பெருமாளாகிய ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் :** விமானம், திருவாசல், மதில், கொடுங்கை துவஜஸ்தம்பம், பிராகாரங்களுக்குப் பொற்றகடுகள் போட்டதாக செம்பொன் தேர் ஒன்றும்.

—கோயிலொழுகு.
—Epi Indica III.

13. **விருப்பண்ண உடையார் ஹரிஹர உடையார் :** துலாபுருஷ மண்டபம் பொன்வேய்ந்ததாக.

14 **கிருஷ்ணப்ப நாயக்கர் :** கி. பி. 1452-ல் அனேக ஆபரணாதிகளும், காவிரியின் ஆற்றங்கரையில் அம்மா மண்டபம் படித்துரை மண்டபம் கட்டியது. அவர் மகன் குமார கிருஷ்ணப்பன் ஸ்ரீ பெருமாள் வைகுந்த ஏகாதசியன்று அணிந்துகொள்ளும் இலட்சத்து 50 ஆயிரம் பொன் பொறுமான இரத்தின அங்கியும், ரத்ன கிரீடமும், இவை குமார நரஸிம்ம வாதூல தேசிகரால் பிரதிட்டிக்கப்பெற்றது.

15. **கிருஷ்ணராயர் :** கோயில் முதல் பிராகாரத்தின் கதவை ஸ்வர்ணமாக செய்தது. (கல்வெட்டு).

16. **விஜயரங்க சொக்கநாத நாயக்கர் :** (1704--31) கொடுத்த 11 இலட்சம் பொருமான முத்தங்கி, மற்றும், ஆபரணாதிகள், பத்து லட்சம் பொருமானவை.

17. **1898—1903** ஸ்ரீரங்கம் ஸ்ரீ மதுர கவி ராமானுஜ தாஸர் சுமார் லட்சம் ரூபாய்க்கு விமானம் மேல் பத்மம் வரையிலுள்ள பாகத்திற்கு தங்கம் பூசினது.

18. 1922 வானமாமலை ஸ்ரீ சின்னகலியன் ராமானுஜ ஜீயர்ஸ்வாமி திருமணத்தூண்களுக்கு ரூ. 8000 செலவில் தங்கப் பூச்சு.

19. 1941—42 ஸ்ரீ மதுர கவி ராமானுஜ தாஸர் செய்த பாகத்துக்கு கீழே 10 அடி வரையிலுள்ள பாகத்துக்கும் பரவாசுதேவர் பக்கத்துக்கும் ஸ்ரீமத் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் சுவாமிகளால் ரூ. 90,000 செலவில் சம்ப்ரோக்ஷணை 20-5-1942 இத்யாதிகள் காணப்படுகின்றன.

**ஆழ்வார்களும், ஆசார்யர்களும் பிறரும் திருவரங்கத்தில் செய்த திருப்பணிகளாவன.**

ஆழ்வார்களான (1) பொய்கையார், (2) பூதத்தார், (3) பேயார், (4) திருமழிசையார், (5) சடகோபன், (6) குலசேகரர், (7) பெரியாழ்வார், (8) தொண்டரடிப் பொடியார், (9) திருப்பாணாழ்வார், (10) திருமங்கையார், (11) மதுரகவி யாழ்வார், (12) ஸ்ரீ ஆண்டாளும் தமது பாமாலையை சாத்து பணிபுரிந்தோராவர். இவர்களுள் தொண்டரடிப்பொடியார் தமது பாமாலை பணியுடன் பூமாலை சூட்டும் பணியும் மேற்கொண்டவர். நாதமுனிகள் ஆளவந்தார் முதலிய முன்னை ஆசார்யர்கள் திருமால் சமயப் பிரசாரம் செய்தவராவர்.

இராமானுஜர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டர், கூரத்தாழ்வார், பெரியவாச்சான் பிள்ளை, வேதாந்த தேசிகர், பிள்ளை லோகாசார்யர், மணவாள மாமுனிகள் முதலியோர் பெருமாளது இயலைக்கூறும் நூல்களை இயற்றியும், ஆழ்வார்கள் இயற்றிய திவ்யப் பிரபந்தங்களுக்கு விரிவுரை கண்டும், அவ் விரிவுரை பிரசாரமும், திருமால் சமய பிரசாரமும் புரிந்து போந்தனர்.

இவருள் இராமானுஜர், மணவாள மாமுனிகள், ஸ்ரீரங்க நாராயணஜீயர் முதலியோர் திருவரங்கக்கோயில் வழிபாடு முறைகளைச் செப்பஞ்செய்தும், நெறி பிறழாமல் காத்தும் வந்தனர்.

## கிளிச்சோழன் அகளங்கன்.

விக்ரமன் முதலிய அரசரும், பிறரும், திருவரங்கத்தின் திருமதில்கள், சுற்றுக் கோயில்கள், மண்டபங்கள், விமானங்கள், கோபுரங்கள், வாவிகள், நந்தவனங்கள் முதலியவற்றை அமைத்தும் தினமும் திருக்கோயிற் பூஜைகளுக்கு வேண்டிய நிபந்தங்களுக்கும், விளை நிலங்களும் மற்றும் பிறவும் அளித்துள்ளார்கள்.

வைணவக்கோயில்களுள் முக்கியமானவை 108 திருப்பதிகளாகும். அவற்றுள் 'கோயில்' என்றும் "திருவரங்கம்" என்றும் கொண்டாடப்படும், இந்த ஒரு தலத்தை மட்டுமே ஆழ்வார்களும் பாடியிருக்கிறுர்கள். நாலாயிரப் பிரபந்தத்தில் இப் பன்னிருவர் திருவரங்கத்தைப் பற்றிக் கூறியிருக்கிற சாரமாவது:

பொய்கையார் வேதங்கள் கூட ஸ்ரீ ரங்கநாதனது பெருமையை விளக்க முடியாதென்றும், பூதத்தார் பகாசுரனை வதைத்த ஸ்ரீ கிருஷ்ணன் என்றும், பேயார் ஜனங்களைக் காப்பாற்ற வாமனவதாரமெடுத்து மஹாபலியிடம் யாசித்தவரென்றும், திருமழிசையார் பிரளய காலத்தில் பால் கடலில் மிதப்பவரென்றும் நம்மாழ்வார் தேவர்களுக்கு அமிர்தம் கொடுக்க கூர்மாவதாரமெடுத்தாரென்றும், குலசேகரர் பகவானிடமுள்ள சேஷனது தலையில் உள்ள ரத்தினமே இவ்விடத்தைப் பிரகாசிப்பிக்கிறதென்றும், பெரியாழ்வார் விபீஷணரைக் காப்பாற்ற இவ்விடமிருந்து இராட்சச பூமியாகிய இலங்கையைப் பார்த்திருக்கும் பகவானென்றும் தொண்டரடிப்பொடியார் தனக்கு இவரை தரிசனம் செய்த பெருமையால் மறுஜனனம் நேரிடக்கூடாதென்றும், திருமங்கையார் பிர்மாவை நாபிக்கமலத்திலுடையவரென்றும், திருப்பாணழ்வார் பூலோகவாசிகளைக் காப்பாற்ற இவ்விடத்தில் பிரகாசிப்பவர் என்றும் பாடியுள்ளார்கள்.

திருமாலின் திவ்யமங்கள சொரூபத்தில் மயங்கி ஆழ்ந்து, மற்ற ஆன்மாக்களும் உய்யும் பொருட்டு தங்கள்

உள்ளக்கிடக்கையை பாமாலேயாகச் சொரிந்தவைதாம் ஆழ்வார்களது திவ்யப்பிரபந்தம் ஆகும். இப் பாக்கள் நாலாயிரமாத்திரமன்றி மற்றும் அவரவர்களால் இயற்றப் பெற்றதன் நூல்களேயும் கொண்டதாகும்.

ஆழ்வார்களது தோற்றம் பல நூற்றுண்டுகளுக்குட் பட்டதாம். ஒரு சிலர் மாத்திரமே சமகாலத்தவர். இவர்களது தனித்தனி வரலாறுகள் விரிக்கின் பெருகும். இதனை "குருபரம்பரை பிரபாவம்" என்ற நூலிற் கண்டுகொள்க.

ஆயினும் இவர்களேப் பற்றிய சிறு குறிப்புக்களே மட்டிலும் இங்கு காணுவோம்.

**பொய்கையார்:** பொய்கையார் பன்னிரு ஆழ்வார்களுள் முதலாவதாக கருதப்படுதலின் முதலாழ்வார் எனவும் கூறப்படுவர். இவரது பிறப்பு காஞ்சியில் திருவெக்கா கோயிற் பொய்கையில் இருந்தமையின் இவரைப் "பொய்கையார்" எனவும் அழைப்பதாயினர். இவரது பாடல்கள் 1-ம் திருவந்தாதியில் காணப்பெறுவதும் திருவரங்கனே

"ஒன்று மறந்தறப்பேனேத வண்ணனே நான்
இன்று மறப்பனே வேழைகாள்
அன்று கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கமே யான் திசை"

என்றும் வாழ்த்துகின்றூர்.

இவருடன் சமகாலத்தவர் எனக் கருதப்படுபவர் பூதத்தாரும், பேயாருமாவார். இவர்கள் மூவரும் முதலில் சந்தித்தமை திருக்கோவிலூரிலாகும். இம் மூவரும் சேர்ந்த ஒரு இடத்து நடந்த ஒரு நிகழ்ச்சிதான்:

"ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என்ற, அருள்மொழிகளுக்கும் காரணமாயிற் றென்பர். இவரது பக்தி விளக்கம்:

" வையம் தகளியா, வார் கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச் —செய்ய
சுடராழி யான் அடிக்கே சூட்டினன் சொல் மாலை
இடராழி நீங்குகவே என்று "

என்பதால் பெறும்.

பூதத்தார் வேறொரு வியக்கம் கூறுவர் :-

" அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா — நன்புருகி
ஞானச்சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான் "

இவ்விருவரும் ஏற்றிவைத்த ஞானத்தீபம்தான் இவை. பொய்கையார் பூமியை விளக்குத்தகழியாகக்கொண்டார். பூதத்தார் தமது அன்பையே தகழியாக்குகிறார். அவர் சமுத்திரத்தை நெய்யாக்கினர். இவர் தமது உள்ளத் துள்ளே சமுத்திரம் போல் பொங்கிக்கொண்டிருக்கும் ஆசையையே நெய்யாக்குகிறார். அவர் சூரியனை விளக் கொளியாக கற்பனை செய்தார். இவரோ உருகிக் கொண்டிருக்கிற தம்முடைய சிந்தையை திரியாக்கி ஞானத்தையே தீபச்சுடராக்குகிறார்".

இவ்விருவரும் கண்ட ஞானானந்த சொரூபம் தான் இது.

" திருக்கண்டேன்! பொன்மேனி கண்டேன்! திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்! செருக்கிளரும்
பொன் ஆழி கண்டேன்! புரிசங்கம் கைக்கண்டேன் !
என் ஆழி வண்ணன்பால் இன்று "

பூதத்தார் " கடல் மல்லை " என்னும் மகாபலிபுரத்தில் ஒரு குருக்கந்தி மரத்தில் தோன்றியவராவர். இவர் திருவரங்கனைப் பாடியது 2-ம் திருவந்தாதியிலுள்ளது. திருப்பதிகளிலெல்லாம் மேலான திருப்பதி அடியார் களுடைய இதயம் தான் என்பதை வெளியிடுகிறார்.

திருமாலின் திருப்பதிகளை கூறுவர் அவர்.

1\. "மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான், மற்றும்
நினைப்பரிய நீளரங்கத்துள்ளான் — எனைப்பலரும்
தேவாதி தேவனெனப் படுவான்
முன் னொருநாள் வாய்பிளந்த மகன்"

2\. "பயின்ற தரங்கம் திருக்கோட்டி பன்னுள்
பயின்றதுவும் வேங்கடமே பன்னுள்
பயின்ற தணிதிகழும் சோலை யணி நீர் மலையே
மணி திகழும் வண் தடக்கை மால்"

3\. "தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்
தமருள்ளும் தன்பொருப்பு வேலை
தமருள்ளும் மாமல்லை, கோவல் மதிட் குடந்தை யென்பரே
ஏவல்ல வெந்தைக்கிடம்"

இவர் பக்திமார்க்கம் சுலபமானதென்றும் அதனல் யமபடர்கள் பயத்தை நீக்கக்கூடுமென்பதும் பரந்தாமனின் தாள் சேர்வது மெய்மை என்பதும் விளக்குகிருர்.

"தாமுளரே? தம்முள்ளம் உள்ளுளதே; தாமரையின்
பூவுளதே; ஏத்தும் பொழுதுண்டே; வாமன்
திருமருவு தாள் மருவு சென்னியரே; செவ்வே
அனுநரகம் சேர்வதரிது"

பேயாழ்வார்: "தேனமர் சோலை மாடமாமயிலை" என்னும் திருமயிலாப்பூரில், கோயில் குளத்தில் செவ்வாலி மலராகத் தோன்றியவர். இவர் பிறந்த இக்குளத்தை இன்றும் மயிலையில் ஒரு கிணரளவாகக் காணலாம். பேயார் தமது உலக வாழ்க்கையைத் துறந்து பக்திப் பயித்தியமாக தம்மோடொத்த ஸாத்விகர்களை தேடி தரிசிக்க ஒருநாள் இருந்த இடத்தில் மறுநாள் இராமல் ஊருக்கு ஓர் இரவாக தங்கி யாத்திரை மேற்கொண்டமையின் இப்பெயரால் அழைக்கப்பெறுகிருர். இவர் திருவரங்கனை பாடியது 3-ம் திருவந்தாதியிற் காணலாம்.

" பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்கு கோயில் போல்
வண்டு வளங்கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகை
இளங் குமரன் றன் விண்ணகர் "

" விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர்வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை — மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு "

பேயாழ்வாரின் உள்ளக்கிடக்கையை காணும் பாடல்களாவன :

" உய்த்துணர் வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி
வைத்து அவனை நாடி வலைப்படுத்தேன் "

இறைவனைக் காண்பதற்கு " இருளாத சிந்தை" வேண்டும்

" அறிவென்னும் தாள்கொளுவி ஐம்புலனும் தம்மில்
செறிவென்னும் திண்கதவம் செம்மி "

இதற்கு இந்திரிய ஐயத்தின் பயனாகிய நல்லொழுக்கம் வேண்டுமென்கிறார். இவ்வாறு ஒழுக்கத்திலே நிலைத்து வாழும் வகை அறிந்தவர்களுக்கு மற்றும் காயக் கிலேசங்கள் வேண்டாம் என்கிறார்.

" பொறுப்பிடையே நின்றும், புனல் குளித்தும், ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர் வேண்டா "

என்கிறார். இவ்வாராக இவர் கண்ட சைவ வைணவ சமரசம் இது.

" தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்னாலும் தோன்றுமால் — சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக் | கு |
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து "

இதனால் தமக்கு உவப்பான திருப்பதி மலைமீது தாம் மனக்கண்ணால் கண்ட ஹரிஹர ரூபத்தை காண்கிறார் அவர்.

**திருப்பாணுழ்வார் :** இவர் பகவானது ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாக உறையூரில் ஒரு கார்த்திகை மாதத்து ரோகிணி நட்சத்திரத்தில் தோன்றியவர். இளங் குழவியாகிய அவரை "பாணர்" வகுப்பினனொருவன் எடுத்து வளர்க்க வளர்ந்தவர். பாணர் வகுப்பினர் ஊருக்கு வெளியே ஒதுக்கப்பட்டு, தீண்டத்தகாதவர் என்று கருதப்பட்டவர். அவர்களது தொழில் ஆடல் பாடல்களாக யாழையே தெய்வமாகப் போற்றி வந்தவர்கள். இவ்வகுப்பில் வளர்ந்த இவர் ஸ்ரீரங்கனுதனது புகழை யாழ்கொண்டு பாடுவதே தன் பணியெனத் தேர்ந்தவர். பாணன் என்ற பெயராலேயே ஜனங்களும் இவரை அழைத்தார்கள்.

பாணருடைய உள்மனம் ஸ்ரீ அரங்கனுதனையே பாவனை செய்துகொண்டிருந்தது. "சிருஷ்டியின் ஆச்சர்யங்களெல்லாம் இவருக்கு அந்த பெருமானுடைய அழகுகளையும், ஆச்சரிய சக்திகளையும் வெளியிட்டன. நீலவானமும், நீலக்கடலும் அவனுடைய எல்லையற்ற நீலமேனியை ஞாபகப்படுத்தின. அந்திவானம் அவனுடைய பீதாம்பரத்தை நினைப்பூட்டியது. வானத்திலுள்ள மேகங்கள் நிறத்தை ஞாபகப்படுத்தியது போல் கருணையையும் ஞாபகப்படுத்தின. தன் வகுப்பின் காரணமாக திருக்கோயிலினுட் புகவொட்டாது, தினமும் காவேரியின் தென்கரையில் திருமுகத்துரைக்கெதிரில் வீணையை மார்பில் தாங்கி விரல்களால் தடவி மீட்டிக் கொண்டு பகவானது பெருமையை பாடிக்கொண்டு காலங் கழித்துக்கொண்டு வந்ததில் ஒருநாள் அரங்க நாதனுக்கு தீர்த்தம் கொண்டுபோகும் லோக சாரங்கர், தான் அபிஷேக ஜலமெடுக்கவேண்டி — இவரை விலகச் சொல்லியும், இவர் மனம் அரங்கநாதன் மீது நிற்க, அசையாது நிற்க; அவருடன் வந்தோர் கற்களை வாரி அவர் மீது வீசினர். பாணரும் திடுக்கிட்டு விழித்து "பொருத்தருளவேணும்" என்று விலகினுர். அன்றிரவு அரங்கநாதன் லோகசாரங்கர் கனவில் தன் முகத்தில் ரத்த காயத்துடன் தோன்றினுர். பரிசாரகர் திடுக்கிட்

டார். பகவான் கூறுவாராயினர்— ''அந்த அன்பன் உள்ளத்தில் இருந்தேன். அப்போது பட்ட காயந்தான் இது. இன்றைய தினம் நீ அவரை நம்முடைய கோயிலுக்குள்ளே கொண்டுவரவேணும்'' என்று திருவாய்மலர்ந்து மறைந்தார்.

லோகசாரங்கர் விழித்தார், திகைத்தார், பாணனை சன்னதிக்கு அழைத்துச் செல்ல அவரை அணுகினர். பாணன் பகவானது கிருபாகடாட்சத்தை வியந்து தான் பகவான் சன்னதியை மிதிக்கவும் கூடுமோ என மறுத்தார். சாரங்கர் அவரைத் தன் தோள்மீது ஏற்றிப் போனர். பாணர் சொற்குழறி யாழை மீட்டிப் பாடிய வண்ணம் தன் அனுபவ அதிசயத்தை வெளியிட முடியாமல் வெளியிட்டு,

'' கோலமாமணி ஆரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோர் எழில்
நீலமேனி, ஐயோ, நிறைகொண்டதென் நெஞ்சினையே ''

எனக் களித்தார். திருச்சந்நதியிலே அரங்கனின் திவ்ய மங்களத்திருமேனியைக் கண்ட பாணர்

'' கொண்டல் வண்ணனைக் கோவலனய் வெண்ணெய்
உண்டவாயன் என் உள்ளங் கவர்ந்தானை
அண்டர் கோன் அணி அரங்கன்என் அமுதனை
கண்ட கண்கள் மற்றென்றினைக் காணவே!

எனக் கடைசியாய் பாடி அந்த ஆனந்தத்திலே முழுகிப் போகிறர்.

இறைவன் அவனை ஆட்கொண்டார்! இவரது அனுபவ அதிசயங்கள் அவர் பாடிய

'' அமலனுதிபிரா னடியார்க் கென்னை யாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள் மதிளரங்கத்தம்மான்
திருக்கமல பாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றதே ''

என்று தொடங்கிய 11 பாடல்களில் அமைந்துள்ளன.

திருமழிசையாழ்வார் : திருக்கச்சிப் பகுதிக்கு கிழக்கில் திருமழிசை என்னும் பகுதியில் ஸ்ரீ பெருமாளின் சுதர் சனத்தின் அம்சமாகப் பிறந்தவர். முதலில் ஒவ்வொரு சமய நூல்களையும் ஓதி சில சமயம் சைவராய் விளங்கி, மயிலையில், பேயாரைக் கண்டு அவரை, ஆசிரியராகப் பெற்று திருமந்திரத்தை உபதேசிக்கப் பெற்று, தீவிர வைணவ பக்தராக விளங்கினர். இதனை அவர் கூறுவார் :

" சாக்கியம் கற்றோம் சமணம் கற்றோ மச்சங்கரனுர்
ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம் — பாக்கியத்தால்
செங்கட்கரியானைச் சேர்ந்தியாந் தீதிலோம்
அங்கட் கரிய தொன்றில் " என்றும்

" என்றும் மறந்தறியேன் என்னெஞ்சத்தே வைத்து
நின்றும் இருந்தும் நெடுமாலை — என்றும்
திருவிருந்த மார்பன் சிரீதரனுக் காளாய்
கருவிருந்த நாள் முதலாக் காப்பு.

—நான்முகன் திருவந்தாதி.

இவரது நூல்கள் — திருக்கந்தவிருந்தம் 120-ம் நான்முகன் திருவந்தாதி 90-ம்.

திருமழிசைப் பிரான் கச்சியில் திருவெஃகாவுக்கு சென்று பக்திசாரர், கணிக்கண்ணன் இவர்களிடம் இருந்தமையும், கணிக்கண்ணன் கச்சிப் பகுதியை விட்டேகும்போது, காமரு பூங்கச்சி மணிவண்ணனும் சென்றேக, அரசன் கவலையுற்று மணிவண்ணனை வேண்ட திருமழிசைப்பிரான்

" கணிக்கண்ணன் போக்கொழிந்தான் — காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டும் "

என்ன, கச்சி எம்பெருமானும் கச்சி புகுந்தமை – அறிந்த தொன்றும், பின்னர் திருமழிசையார், சைவ வாதுக்களில் வென்றும், இறுதியாக குடந்தையில் பல ஆண்டுகள் யோகத்தில் அமர்ந்திருந்து உலகை வாழ்வித்தருளினர்.

**குலசேகர ஆழ்வார் :** சேர நாட்டு சிற்றரசர். மஹா விஷ்ணுவின் பக்தி மேலிட்டு தமது அரசினைத் துறந்து ஸ்ரீரங்கத்தை அணுகி திரு அரங்கப்பெருமானின் பேரின்ப வெள்ளத்தில் திளைத்தவரும்,

"கம்பமதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமுறும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்"

என அரச வாழ்க்கையை துறந்தவர்,

"ஆதி அந்தம் அனந்தரம் அற்புதமான வானவர்தம்பிரான்
பாத மாமலர் சூடும் பக்தியிலாத பாபிகள் உய்த்திடத்
தீதில நன்னெறி காட்டி எங்கும் திரிந்(து) அரங்கன்
எம்மானுக்கே
காதல் செய் தொண்டர்க்(கு) எப்பிறப்பிலும்
காதல் செய்யும் என் நெஞ்சமே"

என்று தீதில் நன்னெறியைப் போற்றுகிறார்.

**திருமங்கையாழ்வார் :** ஸ்ரீ பகவானின் சாரங்கத்தின் அம்சமாய் சீர்காழிக்கடுத்த திருவாலி திருநகரில் பிறந்தவர். சோழர் சாம்ராஜ்யத்தில் ஒரு தளபதியாக இருந்து மன்னர்ப் பதவியடைந்தவர். தனக்கு கிடைத்த பொருள்களை எல்லாம், பாகவதர் நலங்களுக்காகவும் பல வைணவ திருப்பதிகளை செப்பனிடவும் அரங்கன் கோயில் திருமதில், கோபுரம், மண்டபம், பிராகாரங்களைக் கட்டிய பேரரசன், இவர்தாம் இப்பணியில் ஈடுபட்டு இருக்கும்போது பாமாலையுடன் பூமாலை சூட்டிக்கொண்டிருந்த தொண்டரடிப்பொடியாழ்வாரை அறிய நேர்ந்து அவரால் "அருள் மாரி" என்ற பட்டம் சூட்டப்பெற்றவர். இவரது மற்றயப் பட்டங்களாவன ; மங்கை வேந்தன் ஆலிநாடன், கலியன், கலிகன்றி, பரகாலன், கொற்ற வேலோன், ஆடல் மாவலவன், அடையார் சீயம், நாலு கவிப்பெருமாள், லோக திவாகரன் எனப் பல. திருமங்கை மன்னனது திருப்பணிகளுக்கு பொருள் போதாமையின், கொள்ளைக் கூட்டத் தலைவனாக பொருள் சேகரிக்க, இறைவனே அதற்கு உதவி

செய்ய பிராட்டியாருடன் தான் திருமணக்கோலம் பூண்டு ஆபரணங்களுடன் விளங்க அவரை வழிமறித்து யாவற்றையும் கழற்றிக்கொண்டும், அவர் கால் விரலி லுள்ள மோதிரத்தை கழற்ற முயன்று அது வராமையி ஞல் அதனைத் தம் பல்லால் கடித்து நீக்க இறைவன் பரிசத் தால் உண்மையறிந்து பேறுபெற்று

"வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
ஓடினேன்; ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும் பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்
நாராயணு என்னும் நாமம் —என்ற பாடல்கள்.

*அருள்மாரி=அருள்மழை, கலிகன்றி=கலிதோஷத்தை அழித் தவன், வலவன்=வெற்றியாளன், அடையார்சீயம்=பகை வர்களுக்கு சிங்கம்போன்றவன், லோக திவாகரன்=லோகத் திற்கு சூரியன்போன்றவன்.

இவர் சைவ சமயாசார்ய திருஞானசம்பந்தர் காலத் தவர். அவருடன் வாதிட்டும் பௌத்தரை வாதில் வென்றும், நாகப்பட்டிணத்து பௌத்த கோயில் பொன் ஞல் செய்யப்பட்ட புத்தரது விக்கிரஹத்தைக்கொண்டு கிடைத்த பொன்ஞல், திருவரங்கத்து விமானத்துக்குப் பொன் தகடு போர்த்தார்.

இவரது சிலா விக்ரகங்களும், செப்புத் திருமேனி களும், உடை வாளுடன் மிளிர்கின்றதைக் காணலாம். இவரது காலம் ஏழாம் நூற்ருண்டாகும். ஸ்ரீரங்கப் பெருமானின் திருவத்யயன உத்ஸவம் என்ற மார்கழித் திருவிழாவை ஆரம்பித்து வைத்தவர்.

தொண்டரடிப்பொடி ஆழ்வார்: திருமாந்தன்குடி யில் பிறந்தவர். இளமையிலேயே ஸ்ரீரங்கநாதனுக்கு பூமாலை சூட்டும் நந்தவன கைங்கர்யத்தில் ஈடுபட்டு வரு நாளில் ஆலிநாடாஞகிய திருமங்கை மன்னன், இக்

கோவிலுக்கு திருமதில் கட்டும் பணியில் ஈடுபடவே, அத் திருமதில் ஒரு நந்தவனத்தின் நடுவே வர, அதனை அழிக்க சம்மதியாது நந்தவனத்தை தனியே விட்டு, மதிலை வளைத்துக்கட்ட உத்தரவிட்டதின் காரணமாக அவர்க்கு அருள்மாரி என்று பட்டம் கொடுத்தார். பூமாலையுடன் ரெங்கநாயகனுக்கு பாமாலை சூட்டும் தொழிற்கொண்டு ஆழ்வாராதிகளுடன் ஒருவராகத் திகழ்ந்தார். திருப்பதி களில் காணும் அவரது சிற்பங்கள் ஒவ்வொன்றும், ஒரு பூக்குடலையைத் தாங்கி நிற்பதைக் காணலாகும்.

**நம்மாழ்வார் :** ஆழ்வார் திருநகரியில், காரியாருக்கும் உடையநங்கையருக்கும் மகவாக வைகாசி விசாக நாள் பிறந்தவர். குழந்தை பிறந்து பதினாறு ஆண்டுகள் வரை கண் விழியாமல் மௌனத்தோடிருந்தார். மதுர கவிகளின் சந்திப்பால் உரையாடி மெய்பொருள் விளக்குவ தாயினர். இவரது இயற்பெயர் மாறன். ஒரு புளிய மர பொந்தில் 36 ஆண்டுகள் கிடந்துவந்தார். அப் புளிய மரத்தை இன்னும் இக்கோவிலிற் காணலாகும். இவரது அருமைப் பிரபந்தப் பாடல்கள் தவிர, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி பிறவும் திருமகள் நாதன் மீது பாடியுள்ளார். இவரது சிறப்புப் பெயர் "நம்மாழ்வார்" என்பது. பன்னிரு ஆழ்வார்களில் "ஆழ்வார்" என்றால் இவரையே குறிக் கும் பெருமையுடையவர். இவர் வகுளாபரணர் பராங்குசர் காரிமாறன் என்னும் திருப் பெயரினாலும் அழைக்கப்பெறுபவர். கம்பநாடார் தமது கம்ப ராமா யணத்தில் இவர் துதியை கூறுமுகத்து :

"தருகை நீண்ட தயரதன் தான் தரும்
இருகை வேழத் திராவகன் தன் கதை
திருகை வேலைத் திரையிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே"

நம்மாழ்வாரது பெருமை விளங்கும். இவரது அருளில் செயலின் பாசுரங்கள் யாவும் அன்பும் ஞானமும்

நிரம்பியவை. அவற்றுள் திருவாய்மொழியின் முதற் பத்தின் முதல் திருவாய்மொழியே. அவற்றின் பெருமையினை விளக்குவதாகும்.

"உயர்வற உயர் நலம் உடையவன் எவனவன்
மயர்வற மதிநாமம் அருளினன் எவனவன்
அயர்வதும் அமரர்கள் அதிபதி எவனவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனமே"
கரவிசும் பெரிவளி நீர்நில மிவை மிசை
வானவில் திறல்வலி யளிபொறை யாய்நின்ற
பரமனடி மேற்குரு கூர்ச்சட கோபன் சொல்
நிரநிரை யாயிரத் திவை பத்தும் வீடே"

மதுரகவியாழ்வார்: இவர் பாண்டிய நாட்டில் திருக்கோளூரில் பிறந்தவர். தென்மொழி வடமொழிக் கலைகள் பயின்றும், திருமகள் நாதன் மீது ஆராக் காதல் உள்ளமும் படைத்தவர். பல புண்ணியப் பதிகளைச் சேவித்த முறையில் அயோத்தியிலிருக்கும்போது தென் திசையில் ஒரு பேரொளி விளங்கக் கண்டு அதனைத் துடர்ந்து வந்து திருக்குருகூரை அடைந்து, அங்கு பதினாறு வயதினளவான ஞானப் பொலிவினைக்கண்டார். அவர் தாம் நம்மாழ்வார் அவரைக்கண்டதும் யோகத்திலிருந்த நம்மாழ்வார் நம் கண் திறந்து மதுரகவியாரை நோக்கினர். அவர் தம் கேள்விக்கு பதில்கூற, மதுரகவியார் ஆழ்வாரின் சிஷ்யரானார் மதுரகவியார் இன்னும் அவர் திருமகள்நாதனை பாடாது நம்மாழ்வாரையே பதினோறு பாசுரங்களில் அமைத்துள்ளார். இதனை:

"வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர் — ஏறெங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவியா ரெம்மை
ஆழ்வா ரவரே அரண்" எனக் கூறுவர்.

இவ்வாறாக நம்மாழ்வாரது அடியினைப் பின்பற்றி இருக்குமளவில் "ஆழ்வார்" வந்த காரியம் ஆகிவிட்டது என்றார். "அப்படியானால் அடியேனையும் அழைத்துக்கொண்டு

போகவேணும்!'' என்று பிரார்த்தித்தார் மதுரகவி. அப்போது நம்மாழ்வார்:

"மெய்யன் பணைநோக்கி மேதினியில் உள்ளார்க்குச்
செய்ய மறைத் தமிழைச் செப்புவார் நீயல்லால்?''

என்றருளி உலக உபகாரமான கடமைகள் இன்னும் அவரை எதிர் நோக்கி யிருக்கிறதென்று தேற்றினர். நம்மாழ்வார் காலஞ்சென்றதும் மதுரகவியார் அவரது அர்ச்சை உருவை திருக்கோயில் எழுந்தருளப்பண்ணி உத்ஸவங்களும் நடத்திவந்தார். பின்னர் ஆழ்வார் அருளிய தமிழ்மறைகளின் பொருள்களைப் பலரும் இனிது உணரும்படி உரைத்து வாழ்வித்தருளினர்.

மதுரகவியார் பாமாலை

"கண்ணி நுன்சிறுத் தாம்பினுற் கட்டுண்ணப்
பண்ணி யபெரு மாயனென் அப்பனில்
நன்னித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் குமமுதூறுமென் னுவுக்கே

என்றும் அரிய பாடலால் தொடங்கப்பெற்றுள்ளது.

பெரியாழ்வார்: ஸ்ரீவில்லிபுத்தூரில் மஹாவிஷ்ணுவின் கருட அம்சமாக தோன்றினவர். இவரது இயற் பெயர் விஷ்ணு சித்தர். பகவானின் அனந்த கல்யாண குணங் களில் ஈடுபட்டும் அவரது பக்தியில் ஆழ்ந்து, பிரபந்தப் பாடல்கள் (473) நாநூற்று எழுபத்தி மூன்று பாடியவர்: அவர்காலத்து பாண்டிய வல்லப தேவனிடம் பொருள் பெற்று ஸ்ரீவில்லிபுத்தூர் திருப்பதியை புனருத்தாரணம் செய்தார். இவரது அருட்பெருமையால் பட்டர்பிரான் என்றும் புகழ்ப்பெயர் பெற்றூர். மகாஇலக்குமியின் அவதாரமான ஆண்டாள் இவர் முன் சிறு குழந்தை வடிவுடன் ஒரு வயலில் தோன்ற இவரால் எடுத்து வளர்க்கப்பெற்றுள். பெரியாழ்வாரின் தினசரிக் கைங்கர் யம் பெருமாளுக்கு பூமாலை தொடுத்துக் கொடுப்பது. பெருமானின்மேல் ஆராக் காதல்கொண்ட ஆண்டாள்

தினமும் அம்மாலையை தான் அணிந்து அப்பெருமாளுக்கு உகந்ததாக இருக்கிறதா என்பதைப் பார்த்து வந்தாள். ஒருநாள் பெரியாழ்வார் இதனை அறிந்து கோபிக்க இலக்குமிநாதனே இதனை உகந்ததுவும், பின்னர் ஆண்டாளை திருவரங்கம் சேர்த்ததும் அங்கு அவள் அரங்கனுடன் ஐக்கியமானதும், அவரது சரிதையாகும். பெரியாழ்வாரும் இனித் திருவரங்கத்திலேயே இருந்து திருவரங்கநாதனின் கைங்கர்யத்தில் ஈடுபட்டு வாழ்ந்தார். இவர் பாசுரங்கள் பிரபந்தத்தில் முதலாவதாக அமைக்கப் பெற்றவை நானூற்று எழுபத்து மூன்றுகும். "பெரியாழ்வார் திருமொழி" எனப்பெறும், இப் பாசுரங் களில் சில வருமாறு :

## குறள் வெண் செந்துறை

பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பல கோடி நூராயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு
உன் சேவடி செவ்வி திருக்காப்பு

## கலி விருத்தம்

"வண்ணமாடங்கள் சூழ் திருக் கோட்டியூர்க்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தன ருயிற்றே"

ஸ்ரீ ஆண்டாள் என்னும் சூடிக்கொடுத்த நாச்சியார் : ஸ்ரீ ஆண்டாள் பன்னிரு ஆழ்வாராதிகளில் ஒருவர். அரங்கநாதனுல் தம்மிடம் ஐக்யம் செய்து கொள்ளப் பட்டவர். பாண்டிய நாட்டிலே ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் நந்தவனத்தில் ஒரு ஆடிப் பூர தினத்தில் ஸ்ரீதேவி பூதேவியினது அம்சமாய் திடீரென்று பூமியி னின்று தோன்றினவள். இக்குழந்தையை பெரியாழ்வார் தமது மகளாக பாவித்து "கோதை" என்று பெயரிட்டு வளர்த்தார். ஒருதினம் பகவானுக்குத் தயாரித்து வைத்

திருந்த பூமாலையை இவள் தான் அணிந்துகொண்டிருக்கக் கண்ட ஆழ்வார் இவளைக் கோபிக்க, பகவான் ஆழ்வாரின் சொப்பனத்தில் தோன்றி அக்கோதை தம்முடையவளென்றும், அவளைத் தம்மிடத்தில் சேர்ப்பிக்கும்படியும் கட்டளையிட்டார். ஆழ்வாரும் கோதையை ஸ்ரீரங்கம் அழைத்துப்போக, அரங்கப்பெருமாள் அவளை ஐக்கியம் செய்துகொண்டார். ஆண்டாள் செய்த நூல்கள் ' திருப்பாவை ' ' நாச்சியார் திருமொழி ' என்பன.

திருவரங்கத்தில் உள் ஆண்டாள் சன்னதியொன்றும் வெளியாண்டாள் சன்னதியொன்றும் இருப்பது காண்க. இவளது பெருமை விளங்க மற்றைய எல்லா திவ்ய தேசங்களிலும் ஸ்ரீ ஆண்டாள் சன்னதி ஏற்படுத்தி ஆடிப்பூர உத்ஸவம் கொண்டாடுகிறார்கள். ஸ்ரீ ஆண்டாளது திருமணக்கோலத்தை வாழ்த்தும் வாழ்த்துப்பாடல்.

வேதநா யகிவந்தாள் ! வேள்விநா யகிவந்தாள் !
கோதைநா யகிவந்தாள் ! கோலநா யகிவந்தாள் !
போதநா யகிவந்தாள் ! பூமிநா யகிவந்தாள் !
நாதநா யகிவந்தாள் ! ஞானநா யகிவந்தாள் !

கோதையின் பெருமையினையும் அவளை மணந்த திருவரங்கனின் பெருமையினையும் விளக்குவதாகும், ஸ்ரீ ஆண்டாளது ஞானப்பாவாகிய திருப்பாவை. இன்றும் தமிழகத்தில் மார்கழிமாதமன்று தினமும் ஒவ்வொரு வீட்டிலும் ஓதப்பெற்று, ஞானப்பூங்கோதை இன்றும் என்றும் விளங்குகிறாள் அன்பர் உள்ளத்தே.

---

## ஸ்ரீரங்கம் தேவஸ்தான ஆளுகைக்கு உட்பட்ட இதர சந்நிதிகள்.

**1. காட்டழகிய சிங்கர் சந்நிதி :**

இந்தக் கோவில் ஸ்ரீரங்கம் ரயில் நிலயத்திற்கு வடக்கே சுமார் 200 கெஜ தூரத்தில் உள்ளது. முன்னொரு காலத்தில் இங்கு யானைகள் மிகுந்த காடாக

இருந்தமையால் இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் நரஸிம்மருக்கு "காட்டழகிய சிங்கர்" எனப் பெயர் உண்டாயிற்று.

பெருமாள் மேற்கு முகமாய் எழுந்தருளியிருக்கிறார். உள்ளே இருக்கும் ஒரு விசாலமான மண்டபத்தில் அநேக கல்யாணங்கள் நடைபெறுகின்றன. சந்நிதியானது தரை மட்டத்திலிருந்து சுமார் 10 அடி உயரமுள்ள மேடைமீது அமைந்துள்ளது. கர்ப்பக் கிரஹத்தில் ஸ்ரீ லக்ஷ்மிநரஸிம்மன் எழுந்தருளியிருக்கிறார். இவர் சுமார் எட்டு அடி உயரமும், தமது இடது திருத்தொடையின் பேரில் ஸ்ரீ மகாலக்ஷிமியை அமர்த்திக்கொண்டு, இடதுகையால் அன்னாரை அணைத்தபடியும், வலது ஹஸ்தத்தால் அபயப் பிரதானம் செய்துகொண்டும், உட்கார்ந்த திருக்கோலமாய் சேவை அளிக்கிறார்.

இவரது திருநக்ஷத்திரமாகிய ஆனிமாத சுவாதியிலும், ஆடி மாதம் நடக்கும் ஜேஷ்டாபிஷேக தினத்தன்றும் திருமஞ்சனம் விமரிசையாக நடத்தப்படுகிறது. இவைகள் தவிர, நரஸிம்ம ஜயந்தி, யுகாதி பண்டிகைகளிலும் ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதியிலிருந்து அலங்காரம் முதலானவை அனுப்பப்படுகின்றன.

**2. உறையூர் நாச்சியார் சந்நிதி :**

பழய ஊர்ப் பெயர் திருக்கோழியூர். பல நூற்றாண்டுகளாக பழமைச் சோழர்களது தலைநகர். இங்கு ஆண்ட நந்த சோழன் ஸ்ரீ ரங்கநாதனின் அருட்பிரசாதமாக பெற்ற தனது பெண் கமலவல்லியை ஸ்ரீ ரெங்கநாதனுக்குப்பல சீர் வரிசைகளுடன் கலியாணம் செய்துகொடுத்து நாச்சியாருக்கு கோயிலைக்கட்டினார். இங்கு ஆண்டு விழா பங்குனி ரேவதி நாளில் பத்துநாட்கள் நடக்கிறது. பங்குனி உத்திரத்தன்று ஸ்ரீ ரங்கநாதன் உறையூரில் எழுந்தருளி, ஸ்ரீ ரங்கநாதனும் கமலவல்லித்தாயாரும் ஒரு சேத்தியிற் சேவை சாதிக்கிறார். இத்திருப்பதியைப்பற்றிய நூல்களாவன : நிசுளாபுரி மஹாத்மியம், திவ்ய சூரி சரிதம்,

கோயிலொழுகு, லக்ஷ்மி காவ்யம், ஸ்ரீ ரங்கராஜசரித பாணம், ஆதில் பிர்மோத்ஸவம் பங்குனி உத்திரம் பிரணய கலகம் முதலியன. [Archealogical Ins. 51—1890, 181—8—1907 137—1937 Trichy Gezetter P. 27—30—49 336—9; 45,] இத் திருக்கோவில் சமீபத்தில் நன்கு பழுது பார்க்கப்பெற்றது.

3. ஸ்ரீ சுவேதகிரி என்றும் திருவெள்ளரை ஆதி திவ்ய தேசம் :

திருச்சி – துறையூர் பெருவழியில் 12-வது மைலில் பிரிந்து அதன் தெற்கில் 2 பர்லாங்கு தொலைவில் இத் திருக்கோயில் ஒரு வெண்மையான பாறையாகிய சிறு குன்றின்மேல் கட்டப்பெற்றுள்ளது. வீதியிலிருந்து 180 படிகள் ஏறிச் செல்ல அங்கு ஒரு சிறுச் சன்னதியைக் கடந்து செல்ல 5 பிராகாரங்களுடைய கோவில் உள்ளது, விமலாகிருதி விமானம், குச, சக்ர, புஷ்கல, பத்ம, வராஹ மணிகர்ணிகாதீர்த்தங்கள் திவ்ய கந்த க்ஷீரபுஷ்கரிணி பெரிய திருவடி, சிபி, பூதேவி: மார்க்கண்டேயருக்குப் பிரத்யக்ஷம். பெருமாள் திருநாமம் "ஸ்ரீ செந்தாமரைக்கண் பெருமாள்" தாயார் பங்கயச்செல்வி" 'செண்பகவல்லித் தாயார்" வடநாட்டிலிருந்து குடிவந்த சோழியர் மூவாயிர வர் இக்கோவில் பூஜகர்கள், பெரியாழ்வார், திருமங்கை யாழ்வார் மங்களசாசனம் பெற்றது. உய்யக்கொண்டார் திருவவதாரத்தலம் : உடையவர் இங்கு சிலகாலம் வசித்தார். கோவிலுக்குத் தென்பாகத்தில் பல்லவர் காலக் குகைக் கோயிலும் தென்மேற்கில் சுவஸ்தீக பந்தமாக திருக்குளமும் உள்ளன. இதற்கு அருகில் வடஜம்புநாதர் கோவில் ஒன்று பாரையின் மீது உள்ளது.

4. பிரேமபுரி என்கிற திரு அன்பில் :

திருச்சி – லால்குடி ரயில் நிலயமிருந்து பெருவழியில் 5 மைல் துலைவில் உள்ளது. பெருமாள் வடிவழகி நம்பி புஜங்க சயனம், தாயார் அழகிய வல்லி, கோவில் தாரக விமானம் – மண்டூக புஷ்கரணி, பிரமன் வான்மீகருக்கு

பிரத்யக்ஷம் – திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், பாசுரங்கள், 24, தலம் கொள்ளிடக்கரையில் உள்ளது. சேந்தனுரது அவதாரத் தலம். [கல்வெட்டுகள் 512—43—1905. 81—9—1910]

இதற்கு அணித்து அன்பிலான்துரை என்னும் கிழன்பில் சிவன்கோவிலுமுள்ளது. சுவாமி பெயர் "சத்யவாகேசுவரர்" அம்மை "சௌந்தரநாயகி" சமயாசாரியர் அப்பர் சம்பந்தரால் பாடப்பெற்ற தலம். இதை அடுத்து ஒரு மாரியம்மன் கோவிலும் உள்ளது.

**5. கண்ணனூர் மாரியம்மன் கோவில் :**

சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன் மகிமை விளங்கும் மகாகாளிபுரம் என்றும் பெயர். பிக்ஷாண்டார் கோவில் ரயில் நிலயமிருந்து 3 மைல் துலைவிலும் திருச்சியிலிருந்து சென்னைசெல்லும் பெருவழியில் 7 மைல் தொலைவிலுமுள்ளது. போஜ சக்கரவர்த்தி இங்கு பூஜை செய்து உய்ந்ததாக புராணங்கள் கூறுகின்றன. கோவிலுக்கு அணித்தாக பழய ஹொய்சாளர் தலைநகரமாகிய கண்ணனூர் கோட்டை கொத்தளங்களும் பழுதாகிய திருக்கோவிலும் உள்ளன.

## மற்றும் அணித்தான திருக்கோயில்கள்

**1. திருவானைக்கா :**

ஜம்புகேஸ்வரம் என்பது புராதனச் சிவன்கோவில். சென்னை — விழுப்புரம் — குறுக்கு வழியில் ஸ்ரீரங்கம் ரயில்வே நிலயத்திக்கு ½ மைல் தொலைவிலுள்ளது. கோச்செங்கட் சோழனது திருப்பண் பெற்ற எழுபத்தெட்டு கோயில்களில் ஒன்று. அப்புலிங்கம் பிரதிட்டை — பல்லாயிரமாண்டுகளுக்கு முன் இங்கு தவமியற்றிய ஜம்புமாமுனிவரின் தபோமகிமையால் அவர் சிரசிற்றோன்றிய நாவல் மரத்தடியில் நீரையே இலிங்கமாக அமைத்து உமாதேவி தான் ஞானோபதேச மடைய வேண்டி தினந்தோறும் பூசித்துவர அந்த லிங்கத்தின்மீது

தழை விழாமலும், வெயில் படாமலும் இருக்கும்படி சிலந்தி யொன்று உமிழ்நூலால் பந்தலிட இதே லிங்கத்தைப் பூசிக்க கருதிய யானையொன்று வந்தணுகியது.

" அப்பூங் காவில் வெண்ணுவல்
அதன்கீழ் முன்னுல் அரிதேடும்
மெய்பூங் கழலார் வெளிப்படவும்
மிக்க தவத்தோர் வெள்ளானை
கைப்பூம் புனலும் முகத்தூட்டிக்
கமழ்பூங் கொத்தும் அணிந்திறைஞ்சி
மைப்பூங் குவளைக் களத்தாரை
நாளும் வழிபட் டொழுகுமால் "

—பெரியபுராணம்.

நாள்தோறும் தன் துதிக்கை ஜலத்தால் அபிஷேகம் செய்ய அச்சிலந்தியிட்ட மெல்லிய பந்தலழிந்துபோக, சிலந்தி கோபங்கொண்டு யானையின் துதிக்கையில் நுழைய, யானையும், சிலந்தியும் இறக்க நேரிட்டது. இவ்விரு பக்தரது பெருமையையும் வியந்து யானைக்கு முக்தி யருளியதாகவும், சிலந்தி உறையூரில் கோச்செங்கட் சோழனென்ற அரசனுகப் பிறந்து இக்கோவிலை யானை நுழையாத மாடக்கோவிலாக, ஐந்து பிராகாரங்களுடன் அமைத்ததாக புராண வரலாறு கூறுகிறது. ஐந்தாம் பிராகாரம் கட்டும்போது பரமசிவனே வேலையாட்களுக்கு தன் கையால் திருநீறு அளிக்க கூலியாட்கள் அவை பொன்னுக இருக்கக் கண்டார்களென்றும், அதனுல் இப்பிராகாரம் " விபூதிப் பிராகாரம் " என்ற பெயராகிய தென்றும் கூறுவர்.

அப்பர் சுவாமிகளால் பாடப்பெற்ற திருத்தலம்.

2. திருக்கரம்பனூர் என்னும் உத்தமர் கோவில்:

மூவர் கோவிலெனவும் பிக்ஷாண்டார் கோவிலெனவும் விளங்குவது திருச்சிக்கு 4 மைல் தொலைவில் திருச்சி—விழுப்புரம் இருப்புப்பாதை வழியில் " உத்தமர் கோவில் " என்னும் ரயில்வே நிலையத்திற்கு ½ பர்லாங்கில் ஸ்ரீரங்கத்

திற்கும் கொள்ளிடத்திற்கும் வடகரையிலுள்ளது. பெருமாள் பெயர் – "புருஷோத்தமன்", தாயார் பெயர் – "பூர்ணவல்லித் தாயார்" சிவன் "பிக்ஷாடணமூர்த்தி" பிராட்டியார் பெயர் – "சௌந்தரப் பார்வதீ" – பிர்ம்மா, சரஸ்வதிக்கும் சந்நதியுள்ளது.

[கல்வெட்டுக்கள்—602/1902—163—4/1937].

இக்கோவிலில் அநேக கலியாணங்கள் நடக்கின்றன. ஷை தேவஸ்தானத்தாரால் தகுந்த விடுதிகளும், சமையலுக்குத் தேவையான பாத்திர வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

**3. திருசிராமலைக்கோவில் :**

தமிழ்நாட்டில் உள்ள 274 சைவத்தலங்களில் இக்கோயில் காவிரியின் தென்கரையில், ஒரு மலையின்மீது அமைந்துள்ளது. மலைமேல் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு "தாயுமானவர்" என்று பெயர். குன்றின் உச்சியில் "செவ்வந்தி விநாயகர்" சன்னதியும், அடிவாரத்தில் "மாணிக்க விநாயகர்" சன்னதியும் பிரசித்தி பெற்று விளங்குகின்றன. இவ்வாலயத்தில் பல்லவ அரசர்களால் மலையைக் குடைந்து அமைத்த இரண்டு குகைக் கோயில்கள் உள்ளன. மேல் குகையில் வடமொழியிலும், தமிழிலும் பல கல்வெட்டுக்கள் உள்ளன. கோவிலுக்குச் செல்லும் வழியில் இடது பக்கத்தில் நூற்றுக்கால் மண்டபம் ஒன்று உள்ளது. இம்மண்டபத்தில் திருவிழாக்களில் "செட்டிப்பெண் வைபவம்" "திருக்கல்யாண வைபவம்" "தாயுமான அடிகள் உற்சவ வைபவம்" மற்றும் சைவ சமயப் பிரசங்கங்களும் சங்கீதக் கச்சேரிகளும் அவ்வப்போது நடைபெறும்.

முற்றிற்று.

